# தூருவலி

1792



(துப்பறியும் மர்ம நாவல்)





திருவாரூர் :

கே. ஜி. ராஜு

எழுதியது







பிரசுரிப்பவர்கள் :

எம். வி. எஸ். பப்ளிகேஷன்ஸ்

( எம். வி. எஸ். பிரஸ் )

21, பெருமாள் முதலி தெரு,

சௌக்கார் பேட்டை. — சென்னை – 1.

[illegible] பதிப்பு—செப்டம்பர் 1957



இந்த நாவலில் வரும் பெயர்கள் சம்பவங்கள்
யாவும் கற்பனையேயன்றி யாரையும்
குறிப்பிடுவனவல்ல.

**விலை 50 நயா பைசா**

---

அச்சிடப்பட்டது :
**எம். வி. எஸ். பிரஸ், சென்னை-1.**

1

## கடற்கரையில் கார் விபத்து

சந்தனக் குழம்பை வாரி இறைப்பவனைப்போல் சூரியன் தன் செங்கதிர்களைச் சிதறவிட்ட வண்ணம் மேலை மலை முகட்டைத் தழுவிக் கொண்டிருந்தான். சென்னை மெரினா கடற்கரை எப்போதும் போல் மாலைப் பொழுது போக்க வந்து கூடிய மக்களால் சூழப்பட்டு கவர்ச்சி நிறைந்ததாய்க் காணப்பட்டது. பரந்த மணல் வெளியில் ஆண்களும், பெண்களும் அலங்கார சோபிதர்களாய் உலவி வந்தனர். கடற்காற்றின் களிப்பு ஓர் புறம். நீலக் கடல் அலைகளின் நெடிய விளையாட்டு மற்றோர் புறம். இவற்றினால் உண்டாகும் இன்பத்தை மேலும் பெருக்கிக் கொண்டிருந்தது. சற்றுத் தொலைவில் ஒலித்துக் கொண்டிருந்த ரேடியோ கானம். பரந்த மணல் வெளியின் கோடியில் அலைமோதும் கரையின் ஓரத்தில் பழுதடைந்தப் படகு ஒன்று காணப் பட்டது. அதன் ஓரத்தில் உட்கார்ந்து அலைகளின் விளையாட்டில் மனத்தைப் பறி கொடுத்திருந்தனர். ஓர் வாலிபனும், யுவதியும். சமீப காலத்தில் விவாக மானவர்களென்று அவர்களைப் பார்த்தவர்கள் கூறி விடுவார்கள்.

சீறி வரும் அலை, தரையைத் தழுவியதும் சீற்ற மடங்கித் திரும்பி யோடுவது கண்டு களிக்கத் தகுந்த காட்சியே யன்ளே! அடுத்தடுத்து நடக்கும் இந்த அற்புத விளையாட்டில் மனத்தை ஒருமுகமாய் ஈடுபடுத்தி யிருந்த, இந்த இளந் தம்பதிகள் மஞ்சள் வெயில் தேய்ந்து இருள் கவிந்து வருவதை கவனிக்காமலேயே இருந்து விட்டனர். தொலைவில் காணப்பட்ட செம்படவர்களின் மீன் பிடிக்கும் படகுகளும் தரையை யணுகி விட்டதைக் கண்டு திடுக்கிட்டனர் இருவரும். பின் புறம் மறைத்திருந்த பழுதடைந்தப் படகினால், நேரம் போவதை யறியாமல் ஏமாந்து விட்டத் தம்பதிகள் அவசரம் அவசரமாய் எழுந்து நடந்தனர். அப்போது அவர்கள் நடந்தார்கள் என்று சொல்வதைவிட சிறு ஓட்டம் ஓடினர்களென்று சொல்லலாம். ஏனெனில் கண்ணுக் கெட்டிய தூரம் வரையில் யாரும் தென்படவில்லை. காரிருள் கவிந்து விட வில்லையாயினும், மனித சஞ்சாரமே அற்ற மணல் வெளியில் இளந்தம்பதிகள் தனித்து வருவதென்றால் அச்சமேற்படாதிருக்குமா?

ஓட்டமும், நடையுமாய் வந்து கொண்டிருந்தத் தம்பதிகள் கடற்கரை சாலையை அடைந்த போது நன்ருக இருட்டி விட்டது. கரேலென்று காணப்பட்ட தார் பாய்ச்சிய சாலையை பகல் போல் விளங்கச் செய்து கொண்டிருந்தன சாலை விளக்குகள். சாலையை அடைந்த சமயம் இவர்கள் ஏறி வந்த கார் மாத்திரம் அங்கு நின்றிருந்தது. அதோடு வரிசையாய் நிறுத்தப் பட்டிருந்த கார்களில் ஒன்று கூட அங்கில்லை. இவர்கள் தங்கள் காரை யணுகினர்கள்.

"சந்தியா! சீக்கிரம் ஏறி உட்கார். ரொம்ப நேரமாகி விட்டது. அப்பா தேடுவார்!" என்று கூறி விட்டு முன்புறக் கதவைத் திறந்து உள்ளே பாய்ந்தேறி உட்கார்ந்தான் கணவன்.

சந்தியா, பின்புறம் ஏறி உட்கார்ந்ததும் கார் புறப்பட்டது. இந்தக் கார் கால் பர்லாங் தூரம் கூட கடந்திருக்காது, பின் புறத்தில் வேகமாய்க் கார் ஒன்று ஓடி வந்தது. அதேபோல் எதிர்ப் புறமாயும் ஓர் கார் வந்தது. இரண்டு கார்களுமே விலகிப் போகக் கூடியவையாகத் தெரிய வில்லை. நேர் எதிரே வந்து கொண்டிருந்தன.

சந்தியாவின் கணவன் புத்திசாலி. திறமைசாலி சாகஸக் காரன்: முன்னும் பின்னுமாய் வரும் கார்களால் ஆபத்து நேரு மென்றே எண்ணி விட்டான். முழு வேகத்தோடு ஓடும் காரை திடுதிப்பென்று நிறுத்துவதும் அபாயம். முறித்து குறுக்கு வழியில் திருப்புவதும் ஆபத்து. இருபுறங்களிலும் வரும் கார்களின் நடுவே சிக்கி உடல் சிதறி சாவதைவிட, குறுக்கே முறித்துத் திருப்பி அதனுல் ஏற்படும் விபத்து இரண்டாந்தர மானதாய்த்தான் இருக்கு மென்று தீர்மானித்தான். இரண்டு கார்களும் நெருங்கி விட்டன. நொடிப் பொழுதில் தப்பும் மார்க்கத்தைத் தேடவேண்டும். ஸ்டேரிங்கில் தன் கைத்திறமையைக் காட்டி, காரை குறுக்கு வழி யில் திருப்பி விட்டான்.

சாலை ஓரமாய் கோடிட்டாற்போல் உயரமாய் எழுப்பப் பட்டிருந்த சிமின்ட் தடையைத் தாண்டி, அப்பாலிருந்த ஓர் பூவரச மரத்தில் மோதி குலுங்கி நின்றது கார். மரத்தில் பலமாய்

மோதியதால் காரின் முன்பாகம் நசுக்குண்டது. தான் எதிர்பார்த்த அளவு கார் சாலையைக் கடந்து விட்டவுடன் சந்தியாவின் கணவன் இயந்திர ஓட்டத்தை நிறுத்தி விட்டான். அவ் விதம் அவன் நிறுத்த வில்லையானால் கார் முழு மோசமாய் நொறுங்கிப் போயிருக்கும். கண வன்—மனைவியரை முழு உருவில் கண்டிருக்க வும் முடியாது. இருவரும் பிரக்ஞை இழந்துக் கிடந்தனர்.

முன்னும், பின்னுமாய் வந்தக் கார்கள் இரண் டும் நிறுத்தப் பட்டன. அவை இரண்டும் முழு வேகத்தோடு ஓடி வந்தவையானதால், ஓட்டி வந்தவர்களின் சாகஸத்தாலேயே சட்டென்று நிறுத்தப்பட்டன. கார்கள் நின்றதும் ஒவ்வொ ன்றிலிருந்தும் நான்கு ஆட்கள் வீதம்—எட்டு ஆட்கள் கீழே குதித்து ஓடி வந்தனர். அவர் கள் பழுதுபட்டு நிற்கும் காருக்குள் பாய்ந்தனர். மெய் மறந்து பிரேதங்களைப் போல் கிடந்த சந்தி யாவையும் அவள் கணவனையும் தூக்கிச் சென்று ஓர் காருக்குள் கிடத்தினர். அவர்கள் இரண்டு கார்களிலும் ஏறிக் கொண்டனர். கார்கள் இரண்டும் சென்தோம் கடற்கரையை நோக்கி விரைந்தன.

மறுநாள் காலை பத்திரிகைகளில் திடுக்கிடும் செய்தி யொன்று பிரசுரமாகி யிருந்தது.

"நேற்று மாலை மெரினு கடற்கரையில் நடந்த விபரீதம். கண்வன் படுகாய முற்றுக் கிடந்தான். மனைவியைக் காணவில்லை. அவூர்கள் ஏறிச் சென்ற காரும் வழியில் சேதமுற்றுக் கிடந்தது. கணவன் பெயர் சபாநாதன். மனைவியின் பெயர்

சந்தியா. போலீஸார் புலன் விசாரித்து வருகி றார்கள்."

## 2

## பெட்டியில் பிரேதம்

சென்னை எழும்பூரிலிருந்து புறப்பட்ட தூத்துக் குடி பாஸஞ்சர் விழுப்புரத்தை நோக்கி விரைந்து கொண்டிருந்தது. பெட்டிகளில் நிறைந் திருந்தோரில் பேரும்பாலோர் நீண்ட தூரம் பிர யாணம் செய்கிறவர்கள்; ஆதலால், கிடைத்த சொற்ப விடங்களில் உடலைக் குறுக்கியும், கை கால்களை முடக்கியும் அயர்ந்து தூங்கிக் கொண் டிருந்தனர். உட்கார்ந்தபடியே தூங்குகிறவர்கள்; சாய்ந்தபடி தூங்கி விழுந்து கொண்டிருப்பவர் கள்; சரியான வசதி இல்லாமையால் எப்படித் தூங்கலாம் என்று ஆராய்ச்சியிலீடுபட்டிருக்கிற வர்கள்; இப்பேர்ப்பட்டவர்களை யெல்லாம் தன் னுள் அடக்கிக் கொண்டிருந்த மூன்றும் வகுப் புப் பெட்டி யொன்றின் கதவின் ஓரமாய் கிராம வாசிபோல் காணப்பட்ட ஒருவன் உட்கார்ந் திருந்தான் அந்தக் கதவு திறந்திருந்தது. ஜன நெருக்கம் அதிகமாய் விட்டிருந்தக் காரணத்தால் கதவைத்திறந்து விட்டு அந்த இடை வெளியி லும் சிலர் நின்றபடி பிரயாணம் செய்தனர். வழி யில் அவர்கள் இறங்கி விட்டனர். தாம்பரத்தை யடுத்துள்ள வண்டலூரில் ஏறிய கிராமவாசி, தான் தூக்கி வந்த ட்ரங் பெட்டியோடு அந்த விடத்தை முற்றுகை இட்டு விட்டான். பெட்டி யைக் கீழே போட்டு அதன் மேல் உட்கார்ந்த வன் அப்பால் இப்பால் கூட நகரவில்லை. பல ஊர்

களில் ரயில் நின்றது. ஏராளமானவர்கள் ஏற இருக்கத்தானிருந்தார்கள். தாராளமாய் உட்கார்ந்து செல்ல போதுமான இடவசதி ஏற்படாமலுமில்லை. அவன் எதையுமே கவனிக்கவில்லை. அவன் சிறிது நேரம் தலையைத் தொங்கப் போட்டபடி ஏதோ சிந்திப்பதும், பிறகு தலை நிமிர்ந்து பிரயாணிகளை கவனிப்பதுமாய் இருந்தான்.

ரயில் மயிலத்தை யணுகிக் கொண்டிருந்தது. இன்னும் ஒரு பர்லாங் தூரம் ஓடினால் ரயில் நிலயத்தை யடைய வேண்டியதுதான். அமரிக்கையாய் பெட்டியின் மேல் உட்கார்ந்திருந்த கிராம வாசி சட்டென்று எழுந்து நின்றான். சுற்று முற்றும் பார்த்தான். அவன் முகத்தில் மிரட்சி இடம் பெற்றிருந்தது. பிரயாணிகள் தூக்கத்தில் ஆழ்ந்தவர்களாயும், தூக்க மயக்கத்தோடு தள்ளாடுகிறவர்களாயுமிருப்பதை யறிந்தான். திரு திரு வென்று விழித்தபடி பெட்டியிலுள்ளவர்கள் எல்லோரையுமே ஒரு முறை ஊடுருவப் பார்த்தான். சூழ் நிலை ஒத்திருப்பதாய் எண்ணினான் போலும்! குனிந்து பெட்டியை வெளிப்புறமாய் நகர்த்தினான். பாதிப் பெட்டி வெளியிலும், பாதிப் பெட்டி உள்ளிலுமாயிருந்தது. "சரக்" கென்று மறுபாதியையும் பிடித்துத் தள்ளினான் வெளியே! "தொப்!" பென்ற ஓசையோடு பெட்டி தரையில் விழுந்தது. கிராம வாசி பெரிய காரியத்தை சாதித்து விட்டவனைப் போல் பெருமூச் செறிந்தான். கதவை யொட்டினாற் போலிருந்த கைப் பிடிக்கம்பியை பற்றியபடி எட்டிப் பார்த்தான். பின்னிருந்த வண்டிகளின் வெளிச்சம் தரையில் படிந்திருந்தபடியால்,

பெட்டி விழுந்து கிடப்பது அவன் பார்வைக்கு நன்றாய்த் தெரிந்தது. இரண்டே நிமிஷங்களில் அந்தப் பெட்டி இருளில் மூழ்கியது. கிராமவாசி பெரிய காரியத்தை சாதித்து விட்டவனைப் போல் உத்ஸாகமாய் நடந்து காலியாக இருந்த பெஞ்சின் மேல் உட்கார்ந்தான். பெட்டி விழுந்த சப்தத்தை மறைத்து விட்டது ஓடும் ரயிலின் "கட! கட! வென்ற ஓசை.

ரயில் நூறு கஜ தூரம் ஓடி இருக்கும். முழு வேகத்தில் சென்று கொண்டிருந்த ரயில் சரக் கென்று நின்று விட்டது. விழித்திருந்தவர்கள், அரைத் தூக்கத்திலிருந்தவர்கள் எல்லோருமே எழுந்து கதவருகேயும் ஜன்னலருகேயும் சென்று நின்று கவனித்தனர். ஒருவன் முன்னே ஓடிக் கொண்டிருந்தான். அவனை விரட்டிக் கொண்டு சிலர் ஓடிக் கொண்டிருந்தனர். அயர்ந்தவன் பொருளை ஆத்திரக்காரன் அடித்துக் கொண்டு ஓடுகிறான் என்பதை ஒவ்வொருவரும் உணர்ந்து கொண்டனர்.

தூங்கிக் கொண்டிருந்த பிரயாணி யொருவ ரின் தலைமாட்டிலிருந்த தோல் பெட்டியைத் தூக்கிக் கொண்டு ஓடும் திருடனைப் பிடிப்பதில் சிலர் தீவிரத்தைக் காட்டினர். பிரயாண 'டூட்டி' யிலிருந்த கான்ஸ்டபிளும் ஓடினான். தண்டவா ளத்தை யொட்டினாற் போலிருந்த ஒற்றையடிப் பாதையில் ஓடிக் கொண்டிருந்த திருடன் 'தொப்' பென்று எதிலோ இடறி விழுந்தான். அவனை விரட்டிச் சென்றவர்களும் ஒருவர் மேல் ஒருவர் மோதி தரையைத் தழுவினர். திருடன் யார் என்றே விளங்காமல் விழித்தனர் ஒவ்வொரு

வரும். கரேலென்ற இருள் ஆனதால் எதையும் தெளிவாய்க் காணக் கூட வில்லை. திருடனும் குழப்பவில் ஐக்ய மாகியிருந்தான். கையில் தோல்பை வைத்திருப்பவனைக் கண்டால் பிடித் துக் கொள்ளலாம் என்றாலோ, அப்படி எதும் யார் கண்ணுக்கும் புலப்படவில்லை.

திருடனை விரட்டி வந்தவர்கள் கவனம் திரு டனைக் கீழே தள்ளிய "தடை"யின் மேல் சென் றது. கான்ஸ்டபிள் அதை நெருங்கி கவனித் தான். அங்கே ஓர் பெரிய "ட்ரங்" பெட்டி கிடந் தது. அது பூட்டப்பட்டிருந்தது. அங்கிந்தோர் அதைச் சூழ்ந்து கொண்டு கவனித்தனர். அது வும் ஓடிய ரயிலில் திருடப்பட்டதாய்த்தான் இருக்குமென்று நிச்சயித்தனர். சிறு பெட்டி யைப் பிடிக்க வந்தவர்களுக்குப் பெரிய பெட்டிக் கிடைத்து விட்டதே யென்ற திருப்தி வேறே. பெரிய பெட்டியைத் தூக்க முடியாமல் விட்டு விட்டு சிறிய பெட்டியோடு திருடன் மறைந்து விட்டான் என்றே எல்லோரும் அபிப்பிராயப் பட்டனர்.

கான்ஸ்டபிளும், மற்றவர்களும் சேர்ந்து அந்த கனத்தப் பெட்டியைத் தூக்கிக் கொண்டு கூப் பிடு தூரத்தில் நின்றிருந்த ரயிலை யடைந்தனர். "ட்ரங்" பெட்டி "கார்டு" வானில் ஏற்றப் பட் டது. கல் இடறி காலைப் பிடித்துக் கொண்டு உட் கார்ந்த பிரயாணி, மீண்டும் நடையைத் துவக்கு வதைப்போல் அது வரை நின்றிருந்த ரயில் வண்டி விசிலை ஊதியபடி புறப்பட்டது.

3

## அவசர அழைப்பு

"ஹல்லோ! பேசுகிறது யார்?........நான்........ இன்ஸ்பெக்டர் வியாச ராவ் பேசுகிறேன். ............நீங்கள்?....... மிக்க வந்தனம்! நேற்றிரவு மயிலத்துக்கு அருகே ரயில்வேலயனை ஒட்டினாற்போலுள்ள ஒற்றையடிப் பாதையிலிருந்து கிடைத்த ட்ரங் பெட்டியில் ஓர் பெண்ணின் சவமிருப்பதாய்க் கண்டு பிடிக்கப் பட்டது. இறந்தவளின் முகத்தை கொலைகாரர்கள் படுமோசமாய்ச் சிதைத்து விட்டிருக்கிறார்கள். ஆகையால் அடையாளம் கண்டு பிடிக்க முடியவில்லை. அனேகமாய் அந்தப் பெண் சென்னையைச் சேர்ந்தவளாய்த்தான் இருக்க வேண்டும்!....வயதா? பதினெட்டுக்கு மேலிருக்காது. தேக அமைப்பைக் கொண்டு அவள் பெரிய விடத்துப் பெண்ணாய் இருக்க வேண்டுமென்று நிச்சயிக்கிறோம். அவள் கழுத்தில் தரித்திருக்கும் சங்கிலி வடத்திலும், விரல்களில் தரித்துள்ள மோதிரங்களிலும் 'எஸ்' என்ற ஆங்கில எழுத்துப் பொறிக்கப்பட்டிருக்கிறது........சானா, சீனா, சூனா என்பவை போன்ற முதல் எழுத்துக்கள் ஒன்றில் அவள் பெயர் ஆரம்பமாகலாம். நான் குறிப்பிட்டுள்ள அடையாளங்களைக் கொண்ட பெண் ஒருவள் காணவில்லை என்று தகவல் கொடுக்கப்பட்டால், எங்களோடு தொடர்பு ஏற்படுத்திக் கொள்ளவும்........ மேலும் தகவல் கிடைத்தால் தெரிவிக்கிறேன்!.......வந்தனம்!" டெலிபோனில் இவ்வாறு பேசி முடித்தார் விழுப்புரம் ரயில்வே இன்ஸ்பெக்டர். டெலிபோன் மூலம் கிடைத்தத்

தகவலைக் கொண்டு எழும்பூர் போலீஸ் கமிஷ்ணர் காரியாலயத்திலுள்ள (Crime Department) குற்ற இலாகா போலீஸார் சென்னை நகர சம்பவங்களை ஆராய்ந்தனர். இரண்டு நாட்களுக்கு முன் மெரினா கடற்கரையில் காணாமற் போன சந்தியாவைப் பற்றிய குறிப்பே தென்பட்டது. விழுப்புரத்திலிருந்து கிடைத்தத் தகவலை குற்ற இலாகா அதிகாரிகள் பிரதம கமிஷ்ணருக்கு அறிவித்தனர் மயிலத்துக்கு அருகிலிருந்து ட்ரங் பெட்டியில் கிடைத்த கொலையுண்ட பெண்ணின் பிரேதம் சந்தியாவினுடைய தாய் இருக்கலாம் என்று கமிஷ்ணர் அபிப்பிராயப்பட்டார். அது சம்பந்தமான தகவல்களையும், சாட்சியங்களையும் சேகரித்து அறிவிக்கு மாறு துப்பறியும் அதிகாரியாகிய தினகரனுக்கு உத்தரவு பிறப்பித்தார் கமிஷ்ணர்.

கொலை, கொள்ளை, கள்ளக் கடத்தல் ஆள் மாறாட்டம், போர்ஜரி போன்ற குற்ற சம்பவங்களில் சிக்கலும் சூதும் மலிந்தவைகளாயிருந்தால்அவைகளைத் துருவி ஆராயவேண்டியதற்காக தினகரன் சேவையை குற்ற இலாகா நாடுவது வழக்கம். மயிலம் ட்ராங் பெட்டி சவ வழக்கில் மர்மம் இடம் பெற்றிருப்பதாக போலீஸ் குற்ற இலாகா உடனடியாய்த் தீர்மானித்தது. எனவே, அவரின் தலையீட்டை கோரப்பட்டது வியப்பல்லவே!

மெரினா கடற்கரையில் சபாநாதன் தாக்குண்டு கிடந்ததைப் பற்றியும், சந்தியா கடத்திப்போகப் பட்டது பற்றியும், பத்திரிகைகளில் வெளியான செய்திகளை தினகரன் படித்து அறிந்திருந்

தார். தனக்கு உத்தரவு கிடைத்த அன்று பகல் முழுதும் அவர் எங்கெங்கோ சென்று அலேந்து விட்டு மாலே ஆறு மணிக்குத்தான் தன் ஜாகைக்கு வந்து சேர்ந்தார் தினகரன். வந்த உடனேயே அவர் ஊர்ப்பயணம் வைத்து விட்டார். மதுரை அல்லது தூத்துக்குடி வரையில் போய்த்திரும்ப வேண்டியிருக்கு மென்று தன் காரியாலயத்தில் அறிவித்திருந்தார்.

அவர் ஏதேனும் வழக்கில் ஈடுபட்டு வேலே செய்யும் போது எங்கே போகிருர், என்ன செய் கிருர் என்ற விபரம் ஏதுமே யாருக்கும் தெரி யாத மர்மமாய் இருக்கும். குற்றவாளிகள் தண் டனேக் குள்ளாகாமல் தப்பி விட்டார்கள் என்றே பலரும் பேசிக் கொள்ளும் அள்விலிருக்கும் போது வழக்கு சரியான உருவில் அமைந்து விசாரணேக்கு வரும். தினகரன் சம்பந்தப்பட்ட வழக்குகள் ஒவ்வொன்றும் இந்திர ஜால வித் தைப் போலவே உருப் பெற்று நடந்து முடிவு பெறும். அவர் தலேயிட்ட வழக்குகளில் குற்ற வாளிகள் தப்பினுர்கள் என்ற சொல்லே ஏற்பட்ட தில்லே. குறிதவருது சுடும் வேட்டைக்காரனுய் விளங்கி வந்தார் குற்ற வழக்குகளில் தினகரன்.

## 4

### சிற்றுண்டி சாலேயில் சிதறி யோடினர்

நீண்ட தூரம் ஓடி வந்த ரயில் ஒரு நெடுமூச்சை விட்டு குலுங்கி நின்றது. பிரயாணிகள் அவ சரம், அவசரமாய் ஏறிக்கொண்டும் — இறங்கிக் கொண்டு மிருந்தனர். ஏறியவர்கள் இறங்கிய

வர்களின் சந்தடி ஒருவாறு அடங்கியது. இனி ரயில் புறப்பட வேண்டியதுதான். இரண்டாம் வகுப்பு வண்டியின் படியில் ஒரு காலை வைத்தப் படி சிகரெட்டைப் புகைத்துக் கொண்டிருந்தார் ஒருவர். ரயில் புறப்பட்டதும் தாவி ஏறிக் கொள்ளலாமென்று அவ்வாறு நின்றிருந்தார் போலும்! அவர் நடுத்தர வயது அடைந்து விட்டவராய்க் காணப்பட்டார். உயர்ந்த உடைகள், கம்பீரத் தோற்றம். நாகரிக அடிப்படையில் வாழ்க்கை நடத்துகிறவர் என்று அவரைப் பார்த்த உடனேயே தீர்மானித்து விடலாம்.

"இந்த வண்டி மதுரைக்கு எப்போது போய்ச் சேருமோ?" வென்றார் உள்ளே கதவை யொட்டினாற் போலிருந்த மெத்தையில் சாய்ந்திருந்த ஒருவர்.

"நாளை பகல் பன்னிரண்டு மணிக்குப் போய்ச் சேர்ந்து விடும். நீங்கள் இதற்கு முன் மதுரைக்குப் போனதில்லையா?" என்று கேட்டார் படியில் காலை வைத்தபடி நின்றிருந்தவர்.

ரயில் புறப்பட ஆயத்தமாய் விட்டதற்கு அறிகுறிபாய் விஸில் ஊதி விட்டது.

வெளியே நின்றவரும் தாவி உள்ளே நுழைந்து விட்டார்.

செங்கல்பட்டு நிலயத்திலிருந்து புறப்பட்ட ரயில் தென் திசையில் விரைந்து கொண்டிருந்தது.

உள்ளே நுழைந்தவர் எதிர்ப்புற மிருந்த ஆசனத்தில் அமர்ந்தார்.

மின்சார விசிறிகள் சுழன்று கொண்டிருந்தன. விளக்குகள் கம்மிய ஒளியை பரவ விட்டுக் கொண்டிருந்தன.

"ரயில் விழுப்புரம் போய் நின்றதும் நானும் வருகிறேன். நாம் இரண்டு பேரும் சேர்ந்து போய் சிற்றுண்டி புசித்து விட்டுத் திரும்பலாம். அங்கே இருபது நிமிஷங்கள் வரையில் ரயில் நிற்கும்" என்றார் இரண்டாமவர்.

"நீங்கள் எந்த ஊர் வரையில் போகிறீர்கள்?"

"தூத்துக்குடி வரையில் போய்த் திரும்ப வேண்டும். போன உடன் திரும்பிவிட வேண்டியது தான். ஆதலால், வேலைக்காரனைக்கூட கூட்டிவரவில்லை"

"எங்கிருந்து வருகிறீர்கள்?"

"சென்னையிலிருந்துதான். நீங்கள் எங்கிருந்து வருகிறீர்கள்?"

"நானும் சென்னையிலிருந்துதான் வருகிறேன். உங்களுக்கு சென்னையில் உத்தியோகமா? வியாபாரமா?"

"உத்தியோகம் பண்ணி பிழைக்க வேண்டிய நிலையில் கடவுள் என்னைப் படைத்துவிட வில்லை. சென்னையில் சில கட்டிடங்களிருக்கின்றன. திருவள்ளூரில் நிலபுலன்களு மிருக்கின்றன."

பெருமிதம் தொனித்தது அவர் குரலில்.

"தொழில் என்று எதுவு மில்லையா?"

"இல்லாமலில்லை. ஆனால், தற்காலிகமாக அதை நிறுத்தி வைத்திருக்கிறேன்"

"தொழிலில் நஷ்டமோ?"

"இல்லை; தொழிலாளர்களின் தொல்லைதான் காரணம்! எவ்வளவு அள்ளிக் கொடுத்தாலும் போதவில்லையென்ற பல்லவியைப்பாடி தொல்லைப் படுத்தி வருகிறார்களே, அதனால் மனம் நொந்து கதவடைப்புச் செய்து விட்டேன். இருநூறு ஆட்களுக்கு வேலையில்லாமல் போய் விட்டது. போது மென்ற மனமே பொன் செய்யும் மருந்து என்ற அடக்கப் புத்தியில்லாததால் அவதிப் படு கிறார்கள். தொழில் சாலையில் சம்பாதித்துத் தான் நான் பிழைக்க வேண்டு மென்பதில்லை. கொஞ்ச நஞ்சமல்ல. இருபது லட்சத்துக்குக் குறையாத சொத்தை என் முன்னோர்கள் தேடி வைத்திருக்கிறார்கள். என் பரம்பரைக்கே போதுமே என் சொத்து" என்று தனக்குள்ள சொத்தின் பலத்தை சூசகமாய் உயர்த்திப் பேசி னார் அவர்.

"ஒருவரை யொருவர் நன்றாய்த் தெரிந்து கொள்ளாமலேயே, இவ்வளவு தூரம் பேசிக் கொள்கிறோம் ....... உங்கள் தொழிற்சாலையின் விலாசம் என்ன? உங்கள் பெயரென்ன?"

ஆவல்தொனித்தது முதலாமவர் பேச்சில்.

"எஸ். என் ஆர். இஞ்சினீரிங் ஒர்க்ஸ், மூல கொத்தளம்; என்பேர் எஸ். என். ராஜரத்ன முதலியார்."

"ஓஹோ! நீங்கள் தானா? உங்களைப் பற்றியும், உங்கள் தொழிற்சாலையைப் பற்றியும் நான் ரொம்ப கேள்விப் பட்டிருக்கிறேன். சமீபத்தில் உங்கள் தொழிற்சாலையில் நடந்த வேலை நிறுத்

தத்தைப் பற்றியும், நீங்கள் தொழிலாளர் கோரிக்கைகளுக்கு இணங்காமல் பிடிவாதமாய் இருந்ததைப்பற்றியும் பத்திரிகைகள் மூலம் அறிந்தேன். அரசாங்கத்தார் குறுக்கிட்டு மத்தியஸ்தம் செய்யும் அளவுக்கு தகராறை முற்றவைத்து விட்டீர்களே, அதைப் பற்றித்தான் என் போன்றவர்களுக் கெல்லாம் வருத்தம். உழைப்பாளியின் மனம் குளிர்ந்தால்தான் முதலாளியின் வாழ்வு சிறக்கும். முதலாளியும் வாழ வேண்டும். உழைப்பாளியும் வாழ வேண்டும்..........."

"........... அதற்காக சரிபாதி லாபத்தைத் தட்டிக் கொண்டு போகப் பார்க்கிறார்களே, அது நியாயமா?"

"லாபத்தில் சரிபாதி தானே! ஏன் கொடுக்கக் கூடாது? நெற்றி வியர்வையை நிலத்தில் சிந்த விட்டு உழைப்பவன் அடைவதில் ஆத்திரங் காட்டுவது அறியாமையே! முதல் போட்ட கடமைக்காக ஓரளவு லாபத்தை யடைவது போதும் என்ற எண்ணத்தை ஒவ்வொரு முதலாளியும் கொண்டு விட்டால் தொழிலாளி—முதலாளி மோதல் ஏற்பட வழியில்லாமல் போகும்!" என்றார் முதலாமவர்.

"எந்த மோதலையும் லட்சியம் செய்கிறவன் நான் அல்ல. எனக்குக் கொள்கைதான் பெரிது. இலட்சக் கணக்கில் நஷ்ட மேற்பட்டாலும் கொள்கையை நழுவ விடமாட்டேன்" என்றார் ராஜரத்ன முதலியார்.

"பிடிவாதத்தை எல்லா வற்றிலும் காட்டுவது

சரியல்ல. சில வெற்றியைத் தந்தாலும் ஏதோ ஒன்று நாசத்தை உண்டாக்கி விடும்."

தன் கொள்கையை மறுத்துப் பேசுவதை ராஜ ரத்ன முதலியார் விரும்பவில்லை என்பதை அவர் முகத்தில் ஏற்பட்ட மாற்றங்கள் விளக்கின.

"என்னைப் பற்றியெல்லாம் கேட்டுத் தெரிந்து கொண்டீர்கள்; நீங்கள் யார்? உங்களுக்கு என்ன உத்தியோகம் என்பவைகளை நான் தெரிந்து கொள்ள வேண்டாமா?" என்று கேட்டார் ராஜ ரத்ன முதலியார்.

"தாராளமாய்த் தெரிந்து கொள்ளுங்கள். என் பெயர் ராமநாராயண். கவர்ன்மென்ட் ட்ரான்ஸ் போர்ட் டிபார்ட் மெண்டில் உதவி சூப் பிரன் டெண்டாய் இருக்கிறேன்" என்றார் அவர்.

இவர்கள் பேச்சு சுவாரசியத்திலேயே ஈடுபட் டிருந்தனர். ரயிலும் விழுப்புரம் வந்து நின்றது.

"நண்பரே! செங்கல்பட்டிலேயே பசி எடுப்ப தாய்ச் சொன்னீர்கள். இங்கே ரயில் இருபது நிமி ஷத்துக் குறையாமல் நிற்கும். அதற்குள் நாம் சிற்றுண்டிப் புசித்து விட்டுத் திரும்பலாம்" என் றழைத்தார் ராஜாரத்தின முதலியார்.

"ஆமாம், தாங்க முடியாத பசி ஏற்பட்டு அடங்கியும் விட்டது. வாருங்கள் போகலாம்!"

இருவரும் சிற்றுண்டி விடுதியை நோக்கி விரைந்தனர்.

விழுப்பும் ஓர் நகரம் தான். ரயில் சந்திப்பு நில யமிருப்பதால் ஏராளமான மக்கள் வசிக்கின்றனர்

அங்கு வசிப்பவர்களில் பெரும்பாலோர் ரயில் தொழிற் சாலையிலும், ஓடும் ரயில் இலாகாவிலும் வேலை செய்கிறவர்கள். ரயிலில் உத்தியோகம் செய்து உபகாரநிதியோடு விலகி பெரிய வீடுகளைக் கட்டிக் கொண்டு வாழ்வோரும் அதிகம். இந்த ரயில் மகாத்மியத்தைத் தவிர அவ்வூரில் குறிப்பிடத்தக்கது வேறு எதுவுமில்லை. தனிப்பட்டோர் நடத்தும் கனரக தொழிற்சாலைகளோ, சிறு தொழிற்சாலைகளோ இல்லாத ஊர். தனிப்பட்டத் தொழில் மூலம் பிழைக்க வகையற்ற ஊராயினும் ரயில் சந்திப்புப் பெரிதானதால் ஆடம்பரத்திற்குக் குறைச்சலே கிடையாது. ரயில்கள் வந்து கூடும் நேரத்தில் மின்சாரக் குழாய் விளக்குகளின் ஒளி, ரயில் நிலயத்தை தேவலோகம் போல் ஜ்வலிக்கச் செய்யும். வேறு எந்த ரயில் நிலயத்திலும் காணாத காட்சியாய் காணப்படும் விழுப்புரம் ரயில்வே நிலயம்.

புதிய நண்பர்கள் இருவரும் சிற்றுண்டி விடுதிக்குள் நுழைந்தனர் நடு இரவு ஆனதால், அந்த விடுதிக்குள் நுழைந்ததும், அங்கு பிரகாசித்துக் கொண்டிருந்த பாதரச விளக்கொளியால் (Mercury Light) ஏதோ ஓர் புது மண்டலத்திற்குள் நுழைந்து விட்டது போன்ற உணர்ச்சியையடைந்தனர்.

ஓர் மேஜையின் முன் எதிர் எதிராக அமர்ந்தனர் நண்பர்கள் இருவரும். அவர்கள் கேட்ட சிற்றுண்டிகளை எடுத்து வந்து பரிமாறிச் சென்றுன் சப்ளையர்.

இருவரும் புசிப்பதில் ஈடுபட்டனர்.

அடுத்தாற் போலிருந்த மேஜையின் முன் அமர்ந்து சிற்றுண்டி புசித்துக் கொண்டிருந்த ஒருவர் ஆரம்பத்தில் இவர்களை கவனிக்க வில்லை. சிறிது நேரம் சென்று தற்செயலாய்த் திரும்பிய வர் ராம் நாராயண் முகத்தை நேரிட கவனித்து விட்டார். என் தான் அவர் முகம் அப்படி மாறி யதோ! அவர் கைகால்களில் உதறல் ஏற் பட்டதை மற்ருேர் அறிந்திருக்க முடியாது. உப்பு மாவைத் தின்று கொண்டிருந்தவர் பாதியிலேயே அதிர்ச்சியடைந்தது விட்டார்; ஆதலால், மிரண்ட பார்வையோடு முகத்தை மற்ருேர் புறமாய்த் திருப்பிக் கொண்டு எழுந்தார். சாதாரணமாய் வெளியே போகிறவர் போல் நடந்தார். ராம் நாராயண் அவர் போவதை கவனியாதவர் போலவே காணப்பட்டார். எனினும், கடைக்கண் பார்வை அவரையே ஊடுருவிக் கொண்டிருந்தது. அவர் சிற்றுண்டி சாலையின் வெளிப்புறத்தை நோக்கி நடந்து கொண்டிருந்தார். அதே சமயம் அங்கே வந்து சேர்ந்த நாகரிக நங்கை யொரு வள் ராம்நாராயணைப் பார்த்து முறு வலித்த படி எதிரேயிருந்த ஆசனத்தில் அமர்ந்தாள். ராம் நாராயணின் கவனமெல்லாம் வெளியே செல் கிறவர் மேல் பதிந்திருந்தபடியால், அந்த நங்கை யின் வரவை அவர் கவனிக்கவே இல்லை.

"ஹலோ! மிஸ்டர் தினகரன்! ஏது இவ்வளவு தூரம்? ஏதேனும் கொலைக் கேஸ் சம்பந்தமாய் வந்........"

"உஸ்...ஸ்...ஸ்!" என்று மேலும் அவர் பேசாதவாறு வாயைப் பொத்திக் காட்டினுர் ராம் நாராயண் என்று தன்னை அறிமுகப் படுத்திக்

கொண்ட துப்பறியும் தினகரன். ஒரு விநாடியில் அவர் முகத்தில் எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டு விட்டன. ஏமாற்றத்தின் சாயை பரிபூரணமாய் இடம்பெற்றிருந்தது. வெண்ணெய் திரண்டு வரும்போது தாழி உடைந்து விட்டால், மத்தைப் பிடித்துக் கடைந்து கொண்டிருந்தவள் எவ்வித வேதனையை அடைவாளோ, அவ்வித மனத்துயரை தினகரன் அடைந்து விட்டார் என்பதை அவர் முகத்தோற்றம் விளக்கியது.

எதிரே வந்தமர்ந்த நங்கை மிரள மிரள விழித்தாள். தினகரன் என்ன செய்வதென்றே தோன்றாதவராய் ஆடாமல் அசையாமல் கற்சிலையைப் போல் உட்கார்ந்திருந்தார்.

சில நிமிஷங்களில், வெளியே சென்றவரும் மறைந்து விட்டார். எதிரே உட்கார்ந்திருக்கும் ராஜரத்ன முதலியாரோ பேரிடி விழுந்தவர் போல் உட்கார்ந்திருந்தார். அவர் அங்கிருந்து வெளியே சென்றவரை கவனிக்கவே இல்லை. ஆனால் அப்போது தான் அங்கே வந்து சேர்ந்த அந்த மங்கை சொன்ன வார்த்தை அவர் அமைதியைக் குலைத்து விட்டிருந்தது. துப்பறியும் தினகரன், தன்னைத் தொடர்ந்து வந்திருக்கிறாரா? கபடமற்ற நெஞ்சினராய் இருந்தால் தன் பெயரையும் உத்தியோகத்தையும் மறைத்துக் கூறுவானேன்? தன் பெயரைச் சொல்லி வந்தக்காரியம் கொலை சம்பந்தமாய்த்தான் இருக்குமோவென்று அவள் கூறியதைக் கேட்டதும் அவர் ஏன் வாய்ப் பொத்த வேண்டும்? இவ்வாறெல்லாம் எண்ணமிட்டார். ஒரே குழப்பம். என்ன செய்வதென்று விளங்காமல் திகைத்தார் ராஜரத்ன முதலியார்.

"கல்பனு! நீ எங்கே போகிறுய்? சாயங்காலம் உன்னை சென்னையில் சந்தித்தபோது ஊர்ப் பிரயாணத்தைப் பற்றி நீ எதுவும் சொல்லவில்லையே?" தினகரன் கேட்டார்.

"என் சிற்றப்பா மரணுவஸ்தையிலிருப்பதாய் சாயங்காலம் ஆறு மணிக்கு தந்தி யொன்று கிடைத்தது. நாம் சந்தித்தபோது, ஊர்ப்பிரயாணம் பண்ணக் கூடிய சந்தர்ப்பம் ஏற்படுமென்று நான் எ ண் ணி ய தில்லை."

"உன் சிற்றப்பா எந்த ஊரிலிருக்கிறுர்?"

"திருச்சிராப் பள்ளியி லிருக்கிறுர்."

"நீ யார் துணையோடு வந்திருக்கிறுய்?"

"என் மாமா சிவப்பிரகாசர் என்னேடு வந்திருக்கிறுர். அவர் ரயிலில் உட்கார்ந்திருக்கிறுர்."

"அவரையும் கூட்டி வந்திருக்கக் கூடாதா? நான் அவரைப் பார்த்து நீண்டகாலமாகிறது! அவரோடு நான் நிறைய பேச வேண்டியிருக்கிறது நீ இங்கேயே இரு. இதோ போய் அவரை அழைத்து வருகிறேன்" என்று கூறிவிட்டு "சரக்" கென்றெழுந்து வெளியே சென்றுர் தினகரன்.

சிற்றுண்டி சாலையை விட்டு வெளியே வந்த தினகரன், ரயில் நிற்குமிடத்தை எறிட்டும் பார்க்கவில்லை. தென்புறமாய்ப் பார்வையைச் செலுத்தினுர். தன்னைக் கண்டதும் வெளியேறிச்சென்ற மனிதன் மேல்வழி (Over Bridge) படிக்கட்டில் ஏறிக் கொண்டிருப்பதைக் கண்டார். அப்போது ஜனசந்தடியில்லாதிருந்ததால் படிக்கட்டில் அந்த மனிதன் ஏறிச் செல்வதை, பளிச் சென்று பிர

காசித்த விளக்கொளியில் காண முடிந்தது. அதே சமயம் ராஜரத்ன முதலியார் சந்தடி செய்யாமல் தனக்குப் பின் புறமாய்ச் சென்று கொண்டிருப் பதைக் கண்டார் தினகரன். 'வீசுவது ஒரு கல் லாய் இருக்க வேண்டும். விழுவது இரண்டு கனிகளாய் இருக்கவேண்டும்' என்பதுதான் தின கரனின் நோக்கம். முதல் மனிதன் எவ்வழி யாய்ச் செல்லுகிறான் என்பதைப் பார்க்க வேண் டும். அதே சமயம் ராஜரத்ன முதலியாரும் அந்த விடத்தை விட்டு வெளியேறிவிட வேண் டும். எண்ணியபடியே முடிந்து விட்டது.

சிற்றுண்டி சாலையை விட்டுப் புறப்பட்ட ராஜ ரத்னமுதலியார் வடபுறமாய்ச்சென்றார். 'பிளாட் பார' த்தைக் கடந்து சிறிது தூரம் சென்றதும் நகரசபை உயர்நிலைப் பள்ளிக்கு எதிரேயிருந்த புளியந்தோப்பிற்குள் நுழைந்தார். தினகரனின் பார்வையிலிருந்து தப்பி வந்து விட்டதாகவே அவர் எண்ணினார். ஆனால் அவர் தப்பி வந்து விட வில்லை. தினகரன் நிழல் போல் தொடர்ந்து வந்து கொண்டுதான் இருந்தார். வழி நெடுக இருந்த சிறுசிறு செடிகளின் மறைப்பும், மரங் களின் பின்புறமும் அவர் பதுங்கிவர அநுகூல மாய் இருந்தன. புளியந்தோப்பிற்குள் நுழைந்த அவர் திறந்து கிடந்த உயர்நிலைப் பள்ளியின் நுழைவாசல் வழியே புகுந்து செல்லும் ராஜ ரத்ன முதலியாரை விடாமல் தொடர்ந்தார்.

அக்ரகாரத்திற்குள் நுழைந்த ராஜரத்ன முத லியார் தென்புறமாய்த் திரும்பி நடந்தார். சிறிது தூரத்திலிருந்த கடை வீதிக்குள் நுழைந்து மேற்கு நோக்கி விரைந்தார். நடு கடை வீதியில்

தென்புறமாயுள்ள சந்தில் புகுந்தார். தினகரன் அவரை விடாமல் தொடர்ந்து வந்தார். அப்போது அவர் எதையோ கண்டு மிரண்டு நின்றார். முன்னே சென்று கொண்டிருந்த ராஜரத்ன முதலியாரும் அச்சத்தால் உடல் பதற நின்று விட்டார். யாரோ ஒருவன் கையில் பிடித்த குறுந்தடியோடு ஓடி வருவதைக் கண்டுதான் அவர் அவ்வண்ணம் அச்சமுற்றது. ராஜரத்ன முதலியார் திரும்பி ஓடி விடவும் எண்ணினார். ஆனால் அவர் கால்கள் ஓட மறுத்தன. அச்சம் மிஞ்சி விட்டால் அவயவங்களும் செயலற்று விடுகின்றனவே!

'பட' என்ற சப்தம். அடுத்து மின்னல் போன்ற ஒளி. மறு விநாடியே ராஜரத்ன முதலியார் செயலற்று சாய்ந்தார். அடித்தவன் சிட்டு போல் பறந்து மறைந்து விட்டான்.

தினகரன் அவர் அருகே வந்து பார்த்தார். மண்டை யுடைந்து ரத்தம் பிரவாகமாய்ப்பெருகியோடி யிருந்தது. ராஜரத்ன முதலியாரை அடித்து வீழ்த்தி விட்டு மறைந்தவன், ரயில்வே சிற்றுண்டி நிலயத்தில் தன்னைக் கண்டதும் வெளியேறிச் சென்றவன்தான் என்பதை இலகுவில் புரிந்து கொண்டார். இருளானாலும், கம்மிய ஒளியில் அவனைக் காண முடிந்தது. உடலமைப்பால் அவனே தான் என்பதை அறிந்தார்.

தன்னை அடித்து வீழ்த்த வந்த அவன் இருளில் அடையாளம் புரியாமல் ராஜரத்ன முதலியாரைத் தாக்கி விட்டுச் சென்றிருக்கிறான் என்பதை தினகரன் அறிந்தார். ராஜரத்ன முதலியார் படுகாய முற்றுக் கிடந்தார்; ஆயினும், பிரா

ணுபாய மேற்படா தென்றறிந்து, சமீபத்தி லுள்ள போலீஸ் ஸ்டேஷனுக்கு விரைந்தார் தினகரன். அவர் கொடுத்தத் தகவலின் பேரில் போலீஸார் ராஜரத்ன முதலியாரைத் தூக்கிச் சென்று ஆஸ்பத்ரியில் சேர்த்தனர்.

ரயில்வே சிற்றுண்டி சாலையிலிருந்து தன்னைக் கண்டதும் வெருண்டு வெளியேறிச் சென்றானே, அவன் யார்? தன்னைத் தாக்க அவன் எண்ணங் கொள்வானேன்? தினகரன் என்ற பெயரைக் கேட்டதும் ராஜரத்ன முதலியார் ஏன் மிரட்சி யடைந்தார்? சுமுகமாய்ப் பழகிப் பேசிவந்த அவர் சொல்லிக் கொள்ளாமல் திருடனைப் போல் மறைந்து செல்வானேன்? இவ்வாறான சந்தே கங்கள் அவர் உள்ளத்தில் உதித்து உருண்டன. எது எவ்வாறாயினும் சரியே! ராஜரத்ன முதலி யாரைத்தாக்கி விட்டுச் சென்றவனை உடனடி யாய்க் கண்டு பிடித்தாக வேண்டும் விழுப்புரம் ஓர் சிற்றூருமல்ல. ஏராளமான தெருக்களையும், சந்துக்களையும் உடைய நடுத்தரமான நகரம். பக லாய் இருந்தால் இங்கும் அங்குமாய் அலைந்துத் தேடிப் பார்க்கலாம். இரவு, அதிலும் நடுஇரவு. ஆளே இன்னான் என்று புரியாத நிலையில் எங்கே போய்த் தேடுவது? எப்படித்தேடுவது?

சிந்தனையில் ஆழ்ந்தவாறு நடந்து கொண் டிருந்தார் தினகரன். அவர் பாண்டி ரோடும், கச்சேரி ரோடும் சந்திக்கும் முனையில் வந்து கொண்டிருந்தார். கட்டிடங்களின் ஓரமாக யாரோ ஒருவன் நடந்து செல்வது தெரிந்தது. தன் நடையின் வேகத்தைத் தளர்த்திக் கொண் டார். அவன் எங்கே செல்கிறான் என்பதை கவ

னித்த வாறு மெது நடையில் சென்று கொண்டிருந்தார்.

ரயில்வே ஸ்டேஷனுக்குச் செல்லும் அந்தப் பெரிய சாலையில் அந்தமனிதன் நடந்து கொண்டிருந்தான். தயங்கி நடந்து கொண்டிருந்த அவன் வடப்புறத்திலிருந்த பெரிய மாடிக் கட்டடத்தின் படிக்கட்டில் ஏறி நின்று சுற்றும் முற்றும் கவனித்தான். தன்னை யாரும் தொடரவில்லையென்று நிச்சயித்துக் கொண்டான் போலும்! தெருக்கதவைத் தட்டினன். பதிலில்லை. கதவும் திறக்கப் படவில்லை. மீண்டும் மீண்டும் கதவைத் தட்டி ஓசையைப் பெருக்கினன். எல்லோரும் அயர்ந்து தூங்கும் அந்த சாம நேரத்தில் உள்ளிருந்தவர்களும் அயர்ந்த தூக்கத்தில் ஆழ்ந்து விட்டார்களெனத் தெரிந்தது.

"அக்கா! அக்கா!"

"........................"

"கல்பனு! கல்பனு!"

கதவைத் தட்டிய வாறு பெயரையும் சொல்லிக் கூப்பிட்டான்.

சிறிது நேரத்தில் கண்ணுடி ஜன்னல் வழியாய் மின்சார விளக்கு ஏற்றப் படுவது தெரிந்தது. அடுத்தபடியாய் கதவும் திறக்கப்பட்டது. வெளியே நின்றவன் உள்ளே சென்றுன். கதவு மூடப்பட்டது.

தினகரன் அந்தக் காட்சியைக் கண்டு திகைத்துப் போனுர். திருச்சிக்குப் பிரயாணம் செய்து கொண்டிருப்பதாய் ரயில்வே சிற்றுண்டி சாலை

யில் சொன்ன கல்பனு அங்கே ஏன் வந்தாள்? அந்த வீடு யாருடையது? அவன் யார்?

தினகரனின் மன நிலை ஒரே குழப்பத்தில் ஆழ்ந்தது.

அந்த மாடி வீட்டின் முன் புறத்தி லிருந்த மதில் சுவர் இடிந்து விழுந்திருந்தது. நகர சபை விளக்கு சற்றுத் தொலைவி லிருந்ததால், கம்மிய ஒளி கூட இல்லாமல் காரிருள் கவிந்திருந்தது. தெருக்கதவு மூடப்பட்டச் சிறிது நேரத்திற் கெல்லாம் மாடி ஜன்னல் வழியாய் விளக்கொளி தெரிந்தது. எனவே, மாடியில் என்ன நடக்கிற தென்பதை அறியவேண்டும்; அல்லது அவர்கள் எதைப் பற்றிப் பேசுகிறுர்கள் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும். மாடியை அடைந் தால் தானே அங்குள்ளவர்களை கண் காணிக்க இயலும்? சுற்றும் முற்றும் பார்த்தார் தினகரன். இடிந்த மதில் சுவரிலேறி சரிவாய் வேயப்பட் டிருந்த ஓட்டு வில்லை அடுக்குகளில் காலை வைத்து நடந்து ஜன்ன லோரத்தை யடைந்தார். ஓட்டு வில்லைகள் நொறுங்கி 'சர சர' வென்ற சப் தத்தை எழுப்பின. என்ன செய்வது? கூடுமான வரை சப்தம் எழாமலிருக்கட்டும் என்று எண் ணத்தால் மூச்சை உள்ளுக்கிழுத்து ஸ்தம்பனம் செய்தபடி நடக்கும் படியாயிற்று, குறித்த விடத்தை யடைந்ததும், ஜன்னல் கம்பிகள் இரண் டைப் பற்றியபடி உள்ளே எட்டிப் பார்த்தார்.

கல்பனு ஓர் சோபாவில் உட்கார்ந்திருந்தாள். அவளுக்கு எதிரே அந்த மனிதன்—ரயில்வே ஸ்டேஷனிலிருந்த சிற்றுண்டி நிலயத்திலிருந்து நழுவியவன்—ராஜரத்தின முதலியாரை அடித்

துத் தள்ளி விட்டு வந்தவன் அவள் எதிரே நின்று பேசிக் கொண்டிருந்தான். அவன் வேறு யாருமல்ல. தனக்கு நன்ருய் அறிமுகமானவன் சுல்பஞ்வின் சகோதரன் கனக சுந்தரமே என் றறிந்து வியப்படைந்தார். ஆனால் அவன் முகத் தில் ஏதோ ஓர்மாறுதல் ஏற்பட்டிருந்தது. ஊடு ருவ கவனித்தார். மீசையே வைத்தறியாத அவன் முகத்தில் புதிதாய் மீசை காணப்பட்டது. இரண்டு நாட்களுக்கு முன், அவனை சென்னையில் சந்தித்தபோது மழுமழுப்பாய் இருந்த முகத் தில் இப்போது கறுகறுத்த மீசையல்லவா காட்சி தருகிறது? வியப்படைந்தார் தினகரன். ஒட்டு மீசையா? வில் மீசையா? புதிதாய்க் காணப் பட்ட மீசையைத் தவிர வேறு எவ்வித மாறு தலுமில்லை அவனிடத்தில்.

"சுந்தரம்! என்ன விருந்தாலும் நீ அவனை அடித்துத் தள்ளி யிருக்கக் கூடாது. ஒரு சமயம் அடி பலமாய் விழுந்து உயிர் பிரிந் திருந்தால் கொலையாய் முடியுமே! அதி லும், நீ அடித்துத் தள்ளி விட்டு வந்துள்ள மனி தன் லேசானவனு? அவன் மனம் வைத்து விட் டால் உன் கதிமாத்திர மென்ன, என் கதியும் அதோகதியாய்த்தான் ஆகி விடும். ஹும்! உன் னிடத்தில் ஆத்திரமும், அவசர புத்தியும் தான் நிறைந்திருக்கிறது. இப்போது நீ செய்து விட்டு வந்திருக்கிற வேலை எந்த விதமான தொந்தரவில் கொண்டு போய் விடப் போகிறதோ" என்ருள்

கல்பனு. அவள் பேச்சில் ஏக்கமும் திகிலும் கலந் திருந்தன.

"என்ன வந்தாலும் அனுபவிக்க வேண்டியது தான். நடப்பது நடந்து விட்டது. அவன் அடியி லிருந்து பிழைத்து வருவது அரிது. அப்படியே பிழைத்து வந்து விட்டாலும் என்னை ஏதுவும் செய்து விடமுடியாது. ஏனென்றால் அடித்தவன் நான் தான் என்பதை அவனால் அறிய முடியாதது மாத்திரமல்ல; நான் தான் அடித்தேன் என்று சொல்ல சாட்சியமும் இல்லையே!" என்றான் கனகசுந்தரம்.

"என்னவோ நீ தைரியமாய்ப் பேசுகிறாய், என க்கு மாத்திரம் பயமாய்த்தான் இருக்கிறது. துப் பறியும் தினகரன் என்ன சாதாரண மனிதனா? மாயாவியோ என்று மதிக்கும் வண்ணம் பற்பல அற்புதங்களைச் செய்தவனாயிற்றே! பயங்கர கொலைக்காரர்களின் கொட்டங்களை யடக்கி பெரும் புகழ் அடைந்தவனாயிற்றே!

அப்போது தினகரன் தொடர்ந்து நின்றதால் கனம் ஏற்பட்டு ஓடுகள் நொறுங்கி சரிந்தன. "சர! சர! வென்ற சப்தம் பெரும் அளவில் கேட்கவே கல்பனாவும், கனகசுந்தரமும் விரைந் தோடி வந்து ஜன்னல் வழியாய் எட்டிப் பார்த் தனர். கரிய இருளில் மங்கலான வெண்ணிற ஜந்து வொன்று ஓட்டுப் பகுதியைக் கடந்து மதில் சுவரைத் தாவுவது போல் தெரிந்தது. கனகசுந்தரம், கையிலே பிச்சுவா வொன்றை எடுத்துக் கொண்டு மாடியைக் கடந்து கீழ்க் கட் டையடைந்தான். கல்பனா, மாடி ஜன்னல் அருகி லேயே நின்று கவனித்துக் கொண்டிருந்தாள்.

கனகசுந்தரம், கதவைத் திறந்து கொண்டு தெரு வாசலுக்கு வருமுன் வெள்ளை ஜந்து போல் தெரிந்தது ,நரையில் குதித்து ஓடி மறைந்து விட்டதை கல்பனு கவனித்துக் கொண்டிருந்தாள்.

"கனக சுந்தரம்! கனக சுந்தரம்!வந்து விடு. அந்த வெள்ளைப் பூனை ஓடி விட்டது." என்று மாடியில் நின்ற படி கூவினுள் கல்பனு.

"என்ன அக்கா! உன் கண் அவ்வளவு மோசமாகவா பழுதடைந்து விட்டது? யாரோ ஒருவன் நம் பேச்சை ஒட்டுக் கேட்டு விட்டுப் போகிருன். ரிவால்வர் கையிலே இருந்தால் சுட்டுத் தள்ளி யிருப்பேன்!

"சரி! சரி! உன் வீரப்ரதாபத்தை யெல்லாம் உள்ளே வந்து பேசிக் கொண்டிரு. தெருவாசலில் நின்று எதையும் உளறிக் கொட்டாதே!" என்ருள் கல்பனு. அவள் பேச்சில் வெறுப்புக் கலந்திருந்தது.

"திருட்டுப் பயல்; தப்பி விட்டான்" என்று முணுமுணுத்தபடி வீட்டுக்குள்ளே திரும்பிச் சென்ருன் கனக சுந்தரம்.

கனக சுந்தரம் மாடியை அடைந்ததும் கையில் வைத்திருந்த பிச்சுவாவை வேண்டா வெறுப்பாக அங்கிருந்த மேஜையின் மேல் வீசி எறிந்தான். கல்பனு சோபாவில் சாய்ந்தாள்.

"கனக சுந்தரம்! மிரண்டவன் கண்ணுக்கு இருண்ட தெல்லாம் பேய் என்ற படி ஏதோ பெரிய ஜாதி பூனை யொன்று மாடியி லிருந்து கீழே குதித்துப் போவதைப் பார்த்து மனித

னென்று எண்ணி பயந்து விட்டாய். ஒரு மனிதன், நினைத்தால் நினைத்தபடி மாடியில் தாவி ஏறவும், மரத்திலிருந்து கீழே பாய்ந்து குதிக்கவும் சக்தியை அடைந்து விட்டால், அவன் மனித சக்தியை விட அதிக சக்தியை அடைந்துள்ளவன் தான் வீணுகப் பிதற்றிக் கொண்டிருக்காதே, உட்கார். இங்கே எவனும் வரவில்லை. எவனும் போகவில்லை." என்று கல்பனு அலட்சியமாய்ச் சொன்னுள்.

"அதிருக்கட்டும். இனி மேல் நாம் இந்த ஊரிலே தங்கி யிருக்கக் கூடாது. சென்னைக்குத் திரும்பி விடுவோம்" என்றுன் கனக சுந்தரம்.

"நானும் அப்படித்தான் நினைக்கிறேன். வளவனூருக்குப் போய் விட்டு அப்படியே சென்னைக்குத் திரும்பி விடலாம். நளினியைப் பார்க்க வேண்டுமென்ற ஆவல் அதிகமாய் இருக்கிறது" என்றுள் கல்பனு.

"விட்டுப் பிரிந்து வந்து ஒரு வாரம் கூட ஆகவில்லையே! அதற்குள்ளாகப் பார்க்க என்னத் தான் ஆசையோ!" என்றுன் கனக சுந்தரம்.

"அவள் எப்போதுமே என்னை விட்டுப் பிரியாமலிருந்து விட்டால் நான் எவ்வளவோ சந்தோஷமடைவேன்."

"நளினி உன் மனதை வசியம் பண்ணி விட்டிருக்க வேண்டுமென்று நினைக்கிறேன். உடன் பிறந்தவனுன என் மேல் வைத்திராத ஆசையல்லவா நீ அவள் மேல் வைத்திருக்கிருய்?"

"அவள் குழந்தையுள்ளம் என் மனத்தை வசீ

கரித்து விட்டது. இனிய பேச்சு; கபடமற்ற நடத்தை எல்லாமே என் இதயத்தைக் கொள்ளை கொண்டு விட்டிருப்பதால், எப்போதுமே அவளை-நினைத்துக் கொண்டு இருக்கிறேன்."

"அப்படியானால் உனக்கு என்னைவிட அவளே மேல் என்று சொல்!"

"மனிதனுக்குள்ள இரண்டு கண்களில் ஒன்றை மேலானதென்றோ, மற்றொன்றை கீழானதென்றோ சொல்லிவிட முடியாது. இரண்டும் ஒரே நிறைதான். நீ எனக்கு வலது கண். அவள் இடது கண். அவள் நமக்கு சிற்றன்னை மகள் மாத்திரமல்ல. பங்காளியின் மகளுங்கூட. ஆனதால், நீ பங்காளிக் காய்ச்சலைக் காட்டுகிறாய். வாழ்வுக்கும், தாழ்வுக்கும் முன்னே நிற்கக் கூடிய பங்காளி வாழச் சம்மதிப்பதில்லை சிலர். அந்தக் காய்ச்சல் உனக்கும் உண்டாய் விட்டதா?" என்றாள் கல்பனா.

"பங்காளிதானா காய்ச்சல் (பொறாமை) படுகிறான்? அந்நியன் வாழப் பொறுக்காத அநியாயக்காரர்கள் எவ்வளவோ பேர் இருக்கிறார்களே! நான் என்ன அந்நியன் பணத்துக்கா ஆசைப் படுகிறேன்?" என்று நியாயம் பேசினான் கனக சுந்தரம்.

"அதெல்லாம் இருக்கட்டும். நாம் வளவனூர் போய் விட்டுத்தான் சென்னைக்குப் புறப்பட வேண்டும். நீ இப்போதே போய் டாக்ஸி ட்ரைவர் கிருஷ்ண பிள்ளையைக் கண்டு சரியாய் மூன்று மணிக்கு டாக்ஸியை இங்கே கொண்டு வரும்படியாய்ச் சொல்லி விட்டு வா" என்றாள் கல்பனா.

"எவ்வளவு சொன்னாலும் கேட்டால்தானே" என்று முணு முணுத்தபடி எழுந்தான் கனக சுந்தரம்.

கல்பனா கொட்டாவி விட்டபடி எழுந்து படுக்கை யறையை நோக்கி நடந்தாள்.

கனக சுந்தரம் மின்சார விளக்கைப் பொருத்தி விட்டு அதன் தேய்ந்த ஒளியில் படிக்கட்டின் வழியே கீழிறங்கினான்.

"அக்கா! அக்கா!" என்று கனக சுந்தரம் கூப்பாடு போட்டான்.

படுக்கை யறைக்குள் சென்ற கல்பனா தம்பி யின் அபாயக் குரலைக் கேட்டு படிக்கட்டை நோக்கி ஓடி வந்தாள்.

"கனக சுந்தரம்! என்ன என்ன?" வென்று பதைத்தக் குரலில் கேட்டாள் கல்பனா.

"யாரோ ஒருவன் என் பேரில் உருய்ந்து கொண்டு போனான்!" என்றான் அவன்.

"இருக்காது. நீ வீண் பிரமையால் அப்படிச் சொல்கிறாய். முதலில் பூனையை மனிதன் என் றாய். இப்போது உன் நிழலையே மனிதனாய் எண்ணி விட்டிருப்பாய்."

"என்னை பைத்தியக் காரனாயும், பயந்தாங் கொள்ளியாயும் தீர்மானித்து விட்டாய் போலி ருக்கிறது" என்று கடுகடுத்தக் குரலில் தன் வெறுப்பை வெளியிட்டான் அவன்.

"இரண்டு நாட்களாகவே உன் மூளை சரியாய் வேலை செய்ய வில்லை. எதை எடுத்தாலும் சந்தேகம்! எதைப் பார்த்தாலும் சந்தேகம்! அடச்சே! இப்படி பயந்தால் என்ன கதியாகிறது? தைரியசாலிக்கு ஒருதரம் சாவு. கோழைக்கு பலதரம் சாவு என்று யாரோ ஒரு அறிஞர் எழுதியிருந்தார். அதைப் போல், நீ கோழைத்தனத்தால் செத்து செத்துப்பிழைத்துக்கொண்டிருக்கிறாய்" என்றாள் கல்பனா. அவள் குரலில் வெறுப்பு தொனித்தது.

"சாதாரண காலத்தில் நீ சொல்கிறபடி பயந்தால் கோழைத்தனத்தால் சாகிறவனாகவே எண்ணலாம். இப்போது அப்படி எல்லாம் வீரம்பேசினால் விபரீதமாக வல்லவா முடிந்து விடும்."

அப்போது அறை யொன்றிற்குள் தட்டு முட்டு சாமான்கள் விழுந்து உருளும் சப்தம் கேட்டது. இருவரும் அங்கே விரைந்தனர். கறும் பூனை யொன்று அந்த அறைக்குள்ளிருந்து வெளியே பாய்ந்து ஓடியது.

"கனக சுந்தரம் பார்த்தாயா! திருடன் வரும் கதை இப்படியும் இருக்கும். மாடியிலிருந்து தரையில் குதித்து ஓடியவன் கதையும் படிக்கட்டில் உருண்டு கொண்டு போனவன் கதையும் இப்படித்தான் இருக்கும். இனிமேலாவது, தைரியத்தை மனதில் வைத்து கச்சேரி ரோட்டிலிருக்கிற டாக்ஸிட்ரைவர் வீடு வரைக்கும் போய் விட்டு வந்து சேர்"

கனக சுந்தரம் வெட்கத்தாலும், வேதனையாலும் எதுவும் பேச இயலாமல் தெரு வாசலை

நோக்கி நடந்தான். கல்பனா படுக்கை யறையை நோக்கிச் சென்றாள்.

தெரு வாசல் கதவைத் திறந்த கனக சுந்தரம் "ஐயோ!" வென்ற அலறலோடு தரையைத் தழுவினான். அடுத்த விநாடியே யாரோ ஒருவன் ஒரே தாவில் தெருவை யடைந்து மறைந்தான்.

கனக சுந்தரத்தின் ஓலத்தைக்கேட்டு கல்பனா விரைந்தோடி வந்தாள். தம்பி கனக சுந்தரம் தடுமாறியபடி எழுந்திருப்பதைக் கண்டு திகைத்தாள்.

"கனகம்! என்ன இது?"

"இதுவா? இது தான் கோழைத்தனத்தால் அடிக்கடி சாகாதவன் அடைந்த பரிசு!"

"என்னத்தான் நடந்தது; விபரமாய்ச் சொல்லேன்?"

"சொல்லவா?....சொல்கிறேன், கேள். யாரோ கதவிடுக்கில் நின்றிருந்த ஒருவன் என் மேல் பாய்ந்து ஒரே அடியில் என்னைத் தரையில் விழுந்து புரளும்படிப் பண்ணி விட்டு ஓடி மறைந்து விட்டான். அவனை நீ ஓர் பூனை என்றாலும் சரி. எலி என்றாலும் சரி. அல்லது. வண்டு, சிற்றெறும்பு எதுவாகச் சொன்னாலும் சரியே! எனக்குத்தான் இரண்டு நாட்களாய்ப் புத்தியே சரியாய் இல்லை யென்று சொல்லி விட்டாயே!"

ஆத்திரம் குரலையடைக்கப் பேசினான் கனக சுந்தரம்.

"சரி, சரி; நீ வீட்டுக்குள்ளே வா. டாக்ஸியும்

வேண்டாம், வேறு எதுவுமே வேண்டாம். வளவ னூருக்கு வேறொரு சமயம் போய்க் கொள்ள லாம். அதிகாலை ரயிலில் சென்னைக்குப் புறப்பட்டு விடுவோம்" என்றாள் கல்பனா.

"அதுதான் சரி என்று எனக்குப்படுகிறது." என்று சொல்லி விட்டு உடைகளைத் தட்டி விட் டுக் கொண்டான். அறை விழுந்த பிடரியையும் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

அதன்பின் அக்காளும், தம்பியும் வீட்டிற்குள் சென்றனர்.

விடிகிற வரையில் அவர்கள் தூங்கப்போகாமல் கிலிப் பிடித்தவர்களாய் பற்பல விஷயங்களைப் பற்றியும் பேசிக் கொண்டிருந்தார்கள். அச்சம் அதிகரித்தாலும், துயரம் அளவுக்கு மிஞ்சினா லும் இராத்தூக்கமும் பசியும் ஏற்படாதென் பதை அனுபவ சாலிகள் தெரிந்துதான் சொல்லி வைத்தனர்.

## 5

### மிரட்சி

நாட்கள் இரண்டு கடந்தன. சென்னை திரு வல்லிக்கேணியிலுள்ள தங்கள் வீட்டில் கனக சுந்தரமும், கல்பனாவும் வெளித் தொடர்பு எது வும் வைத்துக் கொள்ளாமல் அடங்கி யிருந்த னர். தப்பறியும் தினகரன் எங்கிருக்கிறார்? என்ன கதியானார்? என்ற விபரம் ஏதுமே புரியா திருந்தனர். ஆனால் அதிர்ச்சி தரும் செய்தி யொன்று அவர்களுக்குக் கிடைத்தது. ராஜாரத்ன

முதலியார் யாராலோ தாக்கப்பட்டு விழுப்புரம் ஆஸ்பத்திரியில் சிகிச்சைப் பெற்று வருகிறார் என்பது தான் அந்தச் செய்தி. அது முதல் அவர்களை இனந் தெரியாத அச்ச மொன்று பற்றிக் கொண்டது. துப்பறியும் தினகரன் மண்டையை உடைத்துப் போட்டதாய் கனக சுந்தரம் எண்ணியிருந்தான். ஆனால், தன்னால் தாக்கப்பட்டவர் ராஜரத்ன முதலியார் என்றறிந்து பெருந் திகிலடைந்தான். தன்னைத் தொடர்ந்து வருகிறவர் துப்பறியும் தினகரன் என்றறிந்து தானே கனக சுந்தரம் தாக்கினான்? சென்னை வாசியான ராஜரத்ன முதலியார் அந்த நடு இரவிலே அங்கே வரவேண்டிய அவசியமென்ன? இவை எல்லாம் புரியா புதிராகவே விளங்கின கனக சுந்தரத்திற்கும், கல்பனாவுக்கும். தன்னைத் தாக்க வந்தவன் குறிக்கு வேறொருவனை இலக்காக்கி விட்டுத் தப்பிய துப்பறியும் தினகரனின் சாதனை அவர்களுக்கு வியப்பையே உண்டாக்கியது. ஆனால், தினகரன் தங்களை லேசிலே விடப் போவதில்லை என்றெண்ணும் போது அச்சத்தால் அவர்கள் உடல்களில் நடுக்கமேற்பட்டன. விழுப்புரத்திலிருந்து வந்து இரண்டு நாட்களாகியும் தினகரன் அவர்கள் பார்வையில் தென்படவில்லை என்பது ஒருபுறமிருந்தாலும், வேறு எவ்வித போலீஸ் தலையீடும் ஏற்பட வில்லை. மற்ற காரியங்க ளெல்லாம் மறைமுகமாய் இருந்தாலும் ராஜரத்ன முதலியாரைத் தாக்கியது சம்பந்தமாய் போலீஸார் நடவடிக்கை எடுத்திருக்கலாமே! அந்த சம்பவத்தைப் பற்றிய உண்மையை யாருமே அறியாதிருந்தால், அந்த நடுச்சாம நேரத்தில் மர்ம மனிதன் ஒருவன் ஒரு முறை

யல்ல இரண்டு முறை தங்கள் ஜாகையில் தோன்றி மறைவானேன்? தான் கண் காணித்துச் சென்றதற்கு அடையாளமாய் கனகசுந்தரத்தின் பிடரியில் அடியொன்றைக் கொடுத்து விட்டல்லவா அவன் சென்றிருக்கிறான்? எல்லாம் மர்மமாய் மாத்திரமல்ல; மாயமாயும் தோன்றின.

6

## முந்தியும், பிந்தியும்

நடுப் பகல் நேரம். கோடை வெப்பம் தாங்க முடியாததாய் இருந்தது. கல்பனு சோபாவில் சாய்ந்த வண்ணம் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். கனக சுந்தரம் மேஜையின் முன் உட்கார்ந்து புத்தகம் ஒன்றைப் புரட்டிக் கொண்டிருந்தான். படிக்கத் தெரியா விட்டாலும், படம் பார்த்து ரசிப்பதற் கென ஏடு புரட்டுகிறவர்களும் உண்டல்லவா? அந்த இரண்டு ரகத்தவர்களையும் சேர்ந்தவனல்ல கனக சுந்தரம். கனக சுந்தரம் நாகரிகமான குடும்பத்தில் பிறந்தவன். தாய் தந்தையர் நன்கு கற்றுத் தேர்ந்தவர்கள். அவனும் இண்டர் மீடியட் வரையில் படித்தவன். அப்போது அவன் புரட்டிக் கொண்டிருந்தது ஓர் சினிமா சஞ்சிகை. நிறைந்த வர்ண படங்களுள்ளது. அவன் மனம் அந்தப் படங்களில் கூட பதியவில்லை. மனத்தை எங்கோ செல்ல விட்ட வண்ணம் உட்கார்ந்திருந்தான்.

"ஐயா தந்தி!" என்ற அழைப்புச் சொல் அவன் சிந்தனையைக் கலைத்தது. நிமிர்ந்து பார்த்தான் கனக சுந்தரம்.

தந்தி சேவகன் தந்தியைக் கொடுத்து கை யொப்பம் வாங்கிச் சென்றான்.

கனக சுந்தரம் தந்தியைப் பிரித்தான். கல்பனா "தந்தி எந்த ஊரிலிருந்து வந்திருக்கிறது? எது சம்பந்தமாய்க் கொடுக்கப்பட்டது இது? என்று கேட்டபடி அவன் சமீபமாய் வந்து மேஜையின் முனையில் உட்கார்ந்தாள்.

"தங்கை பிராணாபாயமான நிலையி லிருக்கிறாள். கல்பனாவோடு நீ வந்து சேரவும். வேலப்ப முதலி யார், நரையூர்" தந்தியை கனக சுந்தரம் படித் துக் காட்டினான். கல்பனா மனம் பதைக்க தந் தியை வாங்கிப் பார்த்து விட்டு "கனக சுந்தரம்! உடனே புறப்படு. என்ன ஆபத்து? எதனால் ஏற் பட்ட ஆபத்து? என்று விபரம் குறிப்பிட வில்லையே!" என்று ஏங்கிய வாறு பதைத்தோடி அறைக்குள்ளே நுழைந்தாள். கனக சுந்தரமும் எழுந்து சென்றான்.

கல்பனாவும், கனக சுந்தரமும் டாக்ஸி யிலேயே புறப்பட்டார்கள். அவர்கள் ஏறிச் சென்ற டாக்ஸியை மற்றொரு டாக்ஸி பின் தொடர்ந்து சென்றது. பின்னால் தொடர்ந்த டாக்ஸி சற்றுத் தொலைவிலேயே ஓடி வந்ததால் உள்ளிருப்பவர்கள் யாரென்பதை கனக சுந்தரத் தாலும், கல்பனாவினாலும் பார்த்துத் தெரிந்து கொள்ள முடிய வில்லை. கனக சுந்தரத்திற்கு ஏதோ ஐயம் ஏற்பட்டது. டாக்ஸி ட்ரைவரிடம் குசு குசு வென்று என்னவோ சொன்னான். உடனே ட்ரைவர் டாக்ஸியின் வேகத்தைக் குறைத்தான். பின்னால் வந்த டாக்ஸியும் சட் டென்று வேகத்தைத் குறைத்துக் கொண்டது.

ஒரு மனிதன் மெதுவாக நடக்கும் அளவில் கூட காரை ஓட்டிப் பார்த்தான் ட்ரைவர். பின்னால் வந்த டாக்ஸிட்ரைவரும் அதே வேகத்தில் காரை ஓட்டி முன்னால் போகும் காரை திணற வைத்தான். முன்னால் போகும் டாக்ஸி ட்ரைவர் சட்டென்று காரை நிறுத்தினான். அவனும், உள்ளிருந்தவர்களான கனக சுந்தரமும், கல்பனாவும் கீழிறங்கி நின்றார்கள். பின்னால் சென்ற டாக்ஸியும் நின்று விட்டது, அதற்குள்ளிருந்து வயது சென்ற சாயபு ஒருவரும், இளங்குமரிகளான மகம்மதிய ஸ்த்ரீகள் இருவரும் கீழிறங்கினர். ஸ்த்ரீகள் இருவரும் பர்தா தரித்திருந்தனர். பளபளக்கும் பட்டு லுங்கிகளை இடையில் தரித்திருந்தனர். காலிலே பூ வேலை செய்த பாதரட்சைகள் காணப்பட்டன. பாதங்களை பாதசரங்கள் அணி செய்து கொண்டிருந்தன. பர்தாவிற்குள் புகுந்து கொண்டிருந்தாலும் இளமை எழில் குலுங்கும் யுவதிகள் என்பதை அவர்களின் தோற்றம் மெய்ப்பித்தது. கனக சுந்தரம் சிகரெட்டைப் பற்ற வைத்துப் புகைத்தான். அதே சமயம், சாயபுவும் ஓர் சுருட்டைப் பற்ற வைத்து புகையை கொண்டல் கொண்டலாய் விட்டுக் கொண்டிருந்தார். கனக சுந்தரம் சிகரெட்டைப் புகை முடித்ததும் மீண்டும் காரிலேறி உட்கார்ந்தான். கல்பனாவும் பின்ஸீட்டில் ஏறி உட்கார்ந்தாள். பிறகு ட்ரைவர் 'லாவகமாய் ஏறி உட்கார்ந்து ஓட்டினான். பின்னால் தங்கியிருந்த சாயபுவும், ஸ்த்ரீகளும் காரில் ஏறி உட்கார்ந்தனர். ட்ரைவர் முன்னே செல்லும் காரின் வேகத்தை அனுசரித்து ஓட்டினான். இரண்டு டாக்ஸி கார்களும் பந்தய ஓட்டத்தில் போய் கொண்டிருந்தன.

வளவனூரைக் கடந்து வட புறமாய் ஓடி ஒரு மைல் தூரத்திலுள்ள நரையூருக்குள் நுழைந்தது முதலில் ஓடிக் கொண்டிருந்த டாக்ஸி, பின்னால் தொடர்ந்து கொண்டிருந்த டாக்ஸி. பின் தங்கி விட்டது. சில நிமிஷங்களில் வந்த வழியில் திரும்பியோட்டப்பட்டது. அது வளவனூரில் தங்கியதா? வேறு எங்கேனும் சென்று விட்டதா என்பதை யார் அறிவார்?

## 7

## எமன் விடு தூது

சபா நாதன் இன்னும் பூரண சுகமடையாமல் ஆஸ்பத்திரியிலேயே இருந்து வருகிறான். சந்தியாவைப் பற்றிய தகவல் ஏதும் கிட்டாமல் உற்றார், உறவினர் தவித்துக் கொண்டிருந்தனர். போலீஸாரும் தங்கள் நடவடிக்கை எந்த அளவில் இருக்கிறதென்பதைப் பற்றிய தகவல் எதையும் வெளியிட மறுத்தனர். மயிலத்தருகே ட்ரங் பெட்டியில் கண்டு பிடிக்கப் பட்ட பெண்ணின் பிரேதம் சந்தியாவினுடையதாய்த்தான் இருக்க வேண்டுமென்று எல்லோருமே அபிப்பிராயப்பட்டனர். சபாநாதனைத் தூக்கிச் செல்லும் அளவுக்கு எந்த விரோதியும் இருப்பதாய் யாராலும் அனுமானித்துக் கூடச் சொல்ல முடிய வில்லை.

சபா நாதன் சென்னை கந்தசாமி கோவில் தர்மகர்த்தா பதவிக்கு சமீபத்தில் போட்டி யிட்டுத் தோல்வி யடைந்தான். அதைத் தவிர அவன் வேறு பொதுக்காரியங்கள் எதிலும் தலையிட்டது

கிடையாது. உற்ருர் உறவினர் எல்லோருமே அவனிடம் அன்புடன் பழகி வந்தனர். நண்பர்களும் நட்பு குன்ருமலேயே பழகினர். வழிப்பறிகாரர்களின் வேலையாய் இருக்கலாம் என்ருலோ, சம்பவங்களின் தரம் பணபலத்தால் நடத்தப்பட்டதென்பதை நிரூபிக்கிறது. மெரீனு கடற்கரையில் கார் சேதப்படுத்தப் பட்டுக்கிடந்தது; சற்றுத் தொலைவில் சபா நாதன் பிரக்ஞை இழந்து கிடந்தது. சந்தியா தூக்கிச் செல்லப்பட்டிருப்பது; மைலத்தருகே ட்ரங் பெட்டியில் சவம் கிடைத்தது; இவையெல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காக வழிப்பறி பண்ணும் சோதாக்களின் வேலையாய் இல்லையே!

இந்தச் சம்பவங்களின் மர்மத்தையறிவதற்காக துப்பறியும் தினகரன் நியமிக்கப்பட்டிருப்பதை போலீஸ் மேல் அதிகாரிகள் மாத்திரமே அறிவர். பொதுவாக போலீஸார் புலன் விசாரித்து வருகிருர்கள் என்றே பத்திரிகை செய்திகளும் கூறின.

சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் சபாநாதன் சிகிச்சைப் பெறுவதையும், விழுப்புரம் ஆஸ்பத்திரியில் ராஜரத்ன முதலியார் சிகிச்சைப் பெறுவதையும் சம்பந்தப் படுத்திப் பேசுவதற்கு எவ்வித முகாந்திரமும் இல்லாமலிருந்தது.

துப்பறியும் தினகரன் கல்பனுவையும், கனகசுந்தரத்தையும் சென்னைக்கே நேராய்ச் செல்லும் சூழ் நிலையை உண்டாக்கி விட்டு, ஆஸ்பத்திரியில் சிகிச்சைப் பெற்று வரும் ராஜரத்ன முதலியாரை கவனித்துவரச் சென்ருன்.

ராஜரத்ன முதலியார் அன்று இரவு முழுதும் பிரக்ஞை இழந்து கிடந்தார். மறு நாள் காலை தான் அவர் கண் விழித்துப் பார்த்தார். போலீஸார் அவரை சோதித்த போது கைக்கெடிகாரம் பவுன்டன் பேனா, மணிபர்ஸ், அதிலுள்ள பணம் எல்லாமே சரியாய் இருந்தன. திருச்சி வரையில் அவர் வாங்கி இருந்த இரண்டாம் வகுப்பு டிக்கெட் ஒன்றும், திருச்சியி லிருந்து நாராயணன் என்பவரால் ராஜரத்ன முதலியாருக்கு எழுதப் பட்டக் கடிதம் ஒன்றும் காணப்பட்டன. தினகரன் ரயில் டிக்கட்டையும், கடிதத்தையும் போலீஸாரிட மிருந்து பெற்றுக் கொண்டார். தான் மறு முறை வந்து தகவல் தெரிவிக்கும் வரையில் ராஜ ரத்னமுதலியாரை சென்னைக்குப் போகாதவாறு தடுத்து நிறுத்தி வைக்குமாறும் போலீஸாரைக் கேட்டுக் கொண்டார். அதன் பின் தினகரன் எங்கே போனார், என்ன செய்து கொண்டிருக்கிறார் என்ற விபரங்கள் யாருக்குமே புரியா திருந்தன.

வளவனூருக்குச் சென்ற கல்பனா, கனக சுந்தரம் இருவரும் துப்பறியும் தினகரனைப் பற்றிய திகிலால் நல்லுணர்வு அற்றிருந்தார்கள் என்று சொல்லலாம். வெளியே வந்தால் அச்சம்; உள்ளே போனால் அச்சம். உண்ணும்போது, உடுத்தும்போது, உறங்கும்போது எந்த நேரமும் சிந்தை நிறைந்து 'அச்சம்' துன்புறுத்தி வந்தது அவர்களை.

சிறு கிராமமான நரையூரில் நாகரிக மோஸ்தரில் கட்டப்பட்ட மாடிவீடு ஒன்று கம்பீரமாய்க் காட்சி தந்து கொண்டிருந்தது. அதை

சைகோன் காரர் வீடு என்றே எல்லோரும் அழைத்து வந்தனர். வேலப்ப முதலியார் சைகோன் சென்று பல வருஷங்கள் பாடுபட்டு ஏராளமான பணத்தைத் தேடிக் கொண்டு ஊருக்கு வந்து உயர்ந்த மனிதனாய் வாழ்கிறவர்.

வேலப்ப முதலியார், கனக சுந்தரத்திற்கும், கல்பனாவிற்கும் நெருங்கிய உறவினர் — தங்கள் தாயோடு பிறந்த தங்கையின் கணவர். அவர் இவர்களை வேற்றுமையாய் எண்ணுவதில்லை. சொந்த மக்களிடம் காட்டும் விசுவாசத்தை இவர்களிடமும் காட்டினார்.

கனக சுந்தரமும், கல்பனாவும் தாய் தந்தையரை இழந்த பின் வேலப்ப முதலியாரின் கண்காணிப்பிலேயே வளர்ந்தார்கள். போதுமான பொருள் வசதியுள்ளக் குடும்பம் ஆனதால், அந்தப் பொருளில் சிறிதளவு ஆசை கூட வைக்காமல் மக்களை வளர்ப்பதிலும், பொருளைப் பாதுகாப்பதிலுமாய் கவனம் செலுத்தி வந்தார் வேலப்ப முதலியார். இந்தப் பொருளைவிட நான்கு பங்கு அதிகப் பொருளுடையவராய் இருந்ததால் அவர் இதில் ஆசை வைக்கவில்லை என்று கூறலாம்.

கனக சுந்தரமும், கல்பனாவும் வந்து சேர்ந்த சமயம் வேலப்பமுதலியார் கலங்கிய கண்களோடு காணப் பட்டார். அவர் மனம் துன்பச் சுழலில் சிக்கித் துயருற்றிருக்கிற தென்பதை அவரின் சோர்வுற்ற முகம் விளக்கியது

இவர்களைக் கண்டதும் வேலப்ப முதலியார் ஈன சுரத்தில் "கல்பனா வாம்மா! கனக சுந்தரம்!

வாப்பா!" என்று வரவேற்றார். அப்போதுதான் வீட்டிற்குள்ளிருந்து வெளியே வந்த டாக்டர் சேகர் "முதலியார் வாள்! இனி நீர் பயப்பட வேண்டிய தில்லை. உமது மகள் அபாயமான கட்டத்தைக் கடந்து விட்டாள்; இனி, படிப்படியாய் உடல் நிலை அபிவிர்த்தி யடைந்து விடும்" என்று சொல்லி விட்டுச் சென்றார்.

கல்பனாவும், கனக சுந்தரமும் உள்ளே சென்று நோயாளியாய்ப் படுக்கையில் கிடக்கும் நளினியைக் கண்டனர். அவள் சுய உணர் விழந்து பிரேதம்போல் கிடந்தாள். நளினி வேலப்ப முதலியாரின் மூத்தப் பெண். நன்கு படித்தவள்; அழகி; புத்திசாலி; குணசாலியுங்கூட. அவள் சென்னையிலிருந்து நரையூருக்கு வந்து மூன்று நாட்களே யாயின. அவள் சென்னையிலிருந்து புறப்பட்டபோது திடதேகியாயும், உத்ஸாகம் நிறைந்த உள்ளத்தினளாயு மிருந்தாள். ஆனால், அவள் நரையூரை யடைந்த போது சுய உணர் வற்றுக் கிடந்தாள். வேலப்ப முதலியார் விழுப்புரத்திலிருந்தும், பாண்டிச்சேரியிலிருந்தும் பிரபல டாக்டர்களையெல்லாம் தருவித்து சிகிச்சை யளித்தார். அவளுக்கு சிகிச்சை யளித்த டாக்டர்களெல்லாம் உயிர் தப்புவது அரிதென்றே அபிப்பிராயம் தெரிவித்தனர். வேலப்ப முதலியார் தனக்குள்ள ஐந்து மக்களில் முதல் புதல்வியான நளினியையே அதிகமாய் அபிமானித்து வந்தார். அவள் திடீரென்று அபாய நிலையை அடைந்து விட்டதால் அவரின் இதயத்தில் புண்பட்டு விட்டது போன்ற அதிர்ச்சியை அடைந்தார்.

அன்று இரவு எட்டரை மணி இருக்கும் வேலப்ப முதலியார் தெருப்புறத்திலிருந்த வராந்தாவில் சாயவு நாற்காலியில் சாய்ந்தபடி ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அப்போது தெரு வாசல் எதிரே ஓர் வாலிபன் சைக்கிளை விட்டு வந்து நிறுத்தி இறங்கினான். பிரகாசமாய் எரிந்து கொண்டிருந்த விளக்கு வெளிச்சத்தில் வேலப்ப முதலியார் உட்கார்ந்திருப்பதைக் கண்ட அவன் அவரிடம் கடிதம் ஒன்றைக் கொடுத்து விட்டு அவசரமாய் சைக்கிளில் ஏறிச் சென்று விட்டான். கடிதத்தைக் கொடுத்தனுப்பியது யார் என்று கேட்டறிய வேலப்ப முதலியார் விரும்பினார். ஆனால், அவன் ஒரு விநாடி கூட அமைதியாய் நிற்க வில்லையே! வேலப்ப முதலியார் விளக்கின் எதிரே வந்து நின்று உறையைக் கிழித்தெறிந்து விட்டுக் கடிதத்தைப் பிரித்துப் படித்தார்.

“வேலப்ப முதலியாரே,

‘தலைவலியும் காய்ச்சலும் தனக்கு வந்தால் தான் தெரியும்’ என்பதை உம்மிடத்தில் தான் நான் நிதரிசனமாய்க் கண்டேன். உமது பெண்ணின் உயிர் பிரிந்து விடக் கூடா தென்பதற்காக எவ்வளவு பாடு பட்டீர்? எவ்வளவு பணத்தை வாரி இறைத்தீர்? வியாகூலமடைந்தீர்? வேதனைப் பட்டீர்? கண்ணீர் விட்டீர்? கதறியும் அழுதீர்? அப்படித்தானே மற்றோரின் மன நிலையுமிருக்குமென்பதை நீர் எண்ணிப் பார்த்தீரா? நெஞ்சு துணிந்து அநியாயமாய் ஓர் உயிரைப் பறித்து விட்டீரே! அதிலும் மொக்கு அவிழ்க்கும் நிலையிலுள்ள முல்லை மலர் போல் விளங்கிய மோகன சுந்தரியை—என் அருமைத் தங்கையைக் கொல்ல

எப்படித்தான் உமது மனம் துணிந்ததோ! துணிந்தீர்; கொன்றீர்; சவத்தைக் கூட சின்னு பின்னப் படுத்தி விட்டீர். ஆம், அப்படிச் செய்யா விட்டால் இத்தனை நாள் நீர் வெளியே இருந் திருக்க முடியாது. ஏதோ, அசுரத்தனமாகவே நடந்து விட்டீர். உமது நடவடிக்கை ஒவ்வொன் றையும் நான் அறிந்திருக்கிறேன். உம்மை இந் தக் கணம் கூட போலீஸாரிடம் காட்டிக் கொடுக்க என்னால் முடியும். நான் அப்படிச் செய் யப்போகிற தில்லை. உம்மை; உம்மை மாத்திர மல்ல; உம் குடும்பத்தைச் சேர்ந்த அத்தனை பேரையும் தீர்த்துக் கட்டவே தீர்மானித்தேன்! அந்த நோக்கத்துடனேயே உமது மகளுக்கு ஓர் வகை ரசாயனத்தைப் பாலில் கலந்து கொடுத்து நோயாளியாக்கினேன். அதன் பின் என் மனம் மாறி விட்டது குற்றம் செய்தவன் நீ. அதற்கு உடந்தையாய் இருந்தவர்கள் வேறு இருவர். தர்ம நியாயப்படி உங்கள் மூவரைத்தான் நான் பழி தீர்க்க வேண்டும். தீர்க்கத்தான் போகி றேன். முதற்பலி நீர். பிறகு தான் மற்ற இருவரும். குற்றவாளிகளான உங்களைத் திரிய விட்டு ஒரு பாவமும் அறியாத அப்பாவிகளை கொல்வது சரியல்ல வென தீர்மானித்தேன். மேலும், நீர் எந்த நோக்கத்தோடு இந்த அநியா யத்தில் ஈடுபட்டீரோ, அந்த எண்ணம் கைகூடும் சந்தர்ப்பம் தவறியே விட்டது. அந்த முயற்சி உமக்குக் கானல் நீராக முடிந்து விட்டது. இனி உம்மை அடுத்தபடியாய் எதிர் பார்த்திருப்பது சாவுதான். சாவின் முத்தம்தான் உமக்கு சாஸ்வதமான இன்பத்தைத் தரப்போகிறது.

இப்படிக்குக் கொலையுண்டவளின் சகோதரன்"

வேலப்ப முதலியாரின் கைகள் நடுங்கின. அவயவங்கள் முற்றும் பதறின. அவர் முகம் வெளிறிட்டுப் போயிருந்ததை இரவு நேரமானதால் தெளிவாய்க் காணக் கூட வில்லை. சில விநாடிகள் கற்சிலையைப் போல் நின்றிருந்தார் அவர். ஏதோ ஓர் முடிவுக்கு வந்து விட்டவர் போல் கனைத்துக் கொண்டார். 'சர சர' வென்று மாடிப்படியேறி தன் அறைக்குள் நுழைந்தார்.

'டுமீல்!' என்ற துப்பாக்கி வெடிசப்தம் மாடியில் உண்டானதைக் கேட்டு வீட்டிலிருந்தோர் திடுக்கிட்டனர். என்ன விபரீதமோ வென்ற திகிலோடு மாடியை நோக்கி விரைந்தனர். வேலப்ப முதலியாரின் அறைக் கதவு திறந்தே இருந்தது. வேலப்ப முதலியார் இரத்தப் பிரவாகத்தில் புரண்டு கொண்டிருந்தார். குண்டு இடது விலாப் புறத்தில் பாய்ந்து இரத்தம் 'குபுகுபு' வென்று வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. அவருக்குச் சமீபத்தில் ரிவால்வர் ஒன்று கிடந்தது. அதன் வாய்ப்புறத்திலிருந்து லேசான புகை வெளிப்பட்டுக் கொண்டிருந்தது. அன்று சாயங்காலம் தான் சென்னையிலிருந்து வந்து சேர்ந்தவர்களான கல்பனாவும், கனக சுந்தரமும், வேலப்ப முதலியாரின் மனைவியும் மக்களும் அக்கோர சம்பவத்தைக் கண்டு மனம் பதறினர். ஓலமிட்டனர். வீட்டு வேலைக்காரர்கள் போலீஸ் ஸ்டேஷனுக்கும், டாக்டர் வீட்டுக்கும் விரைந்தனர்.

போலீஸாரும், டாக்டரும் வந்து சேருமுன் வேலப்ப முதலியாரின் ஆவி விண்ணுலகேகி விட்டது.

போலீஸார் கொலை நடந்த ஸ்தலத்தையும்,

பிரேதத்தையும் சோதித்தபோது முக்கிய தடய மாய் ரிவால்வர் ஒன்றையே காண முடிந்தது. அந்த ரிவால்வர் வேலப்ப முதலியாருக்குச் சொந்தமானதென்று தெரியவந்தது.

வேலப்ப முதலியாரின் மரணம் 'கொலையா? தற்கொலையா?' என்று தீர்மானிக்க முடியாத புதிராய் இருந்தது.

அவர் இறப்பதற்குச் சிறிது நேரத்திற்குமுன் யாரோ ஓர் வாலிபனால் கொடுக்கப்பட்ட கடிதத் தைப்பற்றி மற்றவர்கள் சொல்லவறிந்த போலீ ஸார் அதைத் தேடிப் பார்த்தனர். அகப்பட வில்லை.

* * * *

ராஜரத்ன முதலியார் மண்டையுடைந்த ரணம் ஆறி வெளிக்கிளம்ப வாரம் ஒன்றுக்கு மேலாகி விட்டது. அவர் சென்னைக்குத் திரும்ப விரும்பி னார். அடித்து மண்டையைப் பிளந்த விரோதி யின் மேல் வழக்கைத் தொடர வேண்டியிருப்ப தால், இரண்டு நாட்களாவது தங்கியிருந்து போகுமாறு போலீஸார் கேட்டுக் கொண்டனர். அவர்கள் விருப்பத்தை மறுத்துப் பேச இயலாத வராய் தங்கியிருக்க சம்மதித்தார் ராஜரத்ன முதலியார். துப்பறியும் தினகரன் சொல்லிச் சென்றபடி, அவரிடம் தகவல் தெரிவித்து விட்டு ராஜரத்ன முதலியாரை சென்னைக்குப்போக அனு மதிக்கலாம் என்பது போலீஸாரின் அபிப்பிரா யம். உடனடியாய் சென்னை போலீஸ் கமிஷ்னர் காரியாலயத்தின் மூலம் துப்பறியும் தினகரனுக் குத் தகவல் தெரிவித்தனர். அப்போது தினகரன் சென்னையிலிருந்ததால் உடனடியாய்ப் பதிலும்

கிடைத்து விட்டது. "அவர் அபிப்பிராயம் போல் சென்னைக்குத் திரும்பிவிட அனுமதியுங்கள்" என்பது தான் தினகரனின் பதில் தந்தி.

ராஜரத்ன முதலியார் சென்னைக்குத் திரும்பியதும் வெளியே தலைகாட்ட வெட்கமுற்றவராய் வீடு அடங்கிக் கிடந்தார். தினகரன் அவரைக் கண்காணிக்க ஒற்றர்களை நியமித்திருந்தார், எனினும், தான் மாத்திரம் அவரை நேரில் சந்திக்கவில்லை. இவரை சந்திப்பதால் எவ்வித பயனும் ஏற்படாதென்பதை அவர் அறிவார். ராஜரத்ன முதலியாரும் மிரளுவார். தானும் நல்லுணர்ச்சியோடு சுமுக நிலையில் அவரோடு பழகவும் பேசவும் இயலாது. அவர் போக்கிலேயே விட்டு, கிட்டும் உளவையறிந்து காரிய சித்தியடைய வேண்டுமென்பது அவர் அபிப்பிராயம். போலீஸார் உஷார்க் குறைவாய் இருக்கிறார்கள் என்று தெரிந்தால் தான் குற்றவாளிகள் தன்னிச்சையாய் நடப்பார்கள். அப்படி தன்னிச்சையாய் நடக்கும் போது தான் குற்றத்தின் தரத்தை இலகுவில் புரிய ஏது வேற்படும். போலீஸார் மற்றோர் யுக்தியையும் கையாளுவர். உண்மையில் குற்றமிழைத்தவன் எங்கோ பதுங்கியிருப்பான். புற்றிலிருக்கும் பாம்பை வெளியே கொண்டு வருவதற்கு பாம்பாட்டி மகுடியை ஊதுவதைப் போல்சந்தேகாஸ்பதத்தை முன்னிருத்தி எவனோ ஒருவனைக் கைது செய்வார்கள். 'அப்பாவி ஒருவன் அகப்பட்டுக் கொண்டான். நாம் செய்த குற்றத்தின் பலனை அவன் அனுபவிக்கப்போகிறான்' என்ற தப்பான அபிப்பிராயத்தைக் கொண்டு பகிரங்கமாய் வெளியே வந்து சஞ்சரிப்பான். குற்றமிழைத்தவன் நடவடிக்கை தானாகவே காட்டிக்

கொடுத்து விடும். போலீஸாரும் அந்தப் பொன்ஞன சமயத்தை தவற விடாமல் பயன் படுத்திக் கொள்வார்கள். இந்தப் போலீஸ் சாணக்ய வித்தையை தினகரன் கையாள்கிறுர் என்பதை யார் தான் அறிவார்?

தண்டையார் பேட்டையிலுள்ள ராஜாத்ன முதலியாரின் பங்களாவில் எப்போதுமே வேலைக்காரர்களின் சந்தடியும், மனைவி மக்களின் மகிழ்ச்சி நிறைந்த சஞ்சாரமும் இடம் பெற்றிருக்கும். அவர் விழுப்புரத்தில் மண்டை யுடைப்பட்டுத் திரும்பியது முதல் அந்த பங்களா புயலடித்து ஓய்ந்த விடம்போல் அமைதியில் மூழ்கிக் கிடந்தது. ஒவ்வொருவரும் களை இழந்த முகத்தோடு காணப்பட்டனர். மனதிலே உத்சாகமிருந்தால்தானே, செயலிலே தெளிவும், சுறுசுறுப்பும் காணப்படும்? எப்போதும் அந்த பங்களாவில் முழங்கிக் கொண்டிருக்கும் ரேடியோ கானம் வாயடைத்துப் போயிருந்தது. எங்கு பார்த்தாலும் இரவு நேரங்களில் பளிச்சிடும் மின்சார குழாய் விளக்குகள் வேலையிழந்து விடுமுறையிலிருந்தன. கம்மிய வெளிச்சந்தரும் பல்புகளே எங்கும் எரிந்தன.

ராஜரத்ன முதலியார் பெரும் பணக்காரர். பெரும் தொழிலதிபர். அவருக்குச் சொந்தமான கட்டிடங்களும், நூற்றுக் கணக்கான தொழிலாளர்கள் வேலை செய்யும் தொழிற்சாலைகளும், சென்னை நகரின் பலபாகங்களிலுமிருந்தன. அவர் ஆடம்பரமாய் உடைகளைத் தரித்து, ஆர்ப்பாட்டமாய் காரை தானே ஓட்டிச் சென்று தொழிற்சாலைகளைக் கவனித்து வருவார். மூல

கொத்தளம் என்ற விடத்திலுள்ளது தான் தலை மைக் காரியாலயம். இவர், விழுப்புரத்திலிருந் தத் திரும்பிய பின் தலைமைக் காரியாலயத் தையோ, கிளைக் காரியாலயங்களையோ ஏறிட்டுக் கூடப் பார்த்தவரல்ல.

விசாலமான வராந்தாவில் போடப்பட்டுள்ள சோபாக்களிலும், நாற்காலிகளிலும் மாறி மாறி உட்காருவதும், எழுந்து உலாவுவதுமே அவர் வேலையாய் இருந்து வந்தது. முன்போல் நண்பர் களோடு நெருங்கிப் பழகுவதுமில்லை. தேடி வரு கிறவர்களைத் தெருவிலேயே நிறுத்தித் திருப் பியனுப்பிவிட தனியாள் ஒருவனை நியமித்திருந் தார். இவ்வாறு இவர் மனித சமுதாயத்தையே வெறுத்து விட்டிருப்பது பலருக்கு வியப்பையே அளித்தது. பலரும் பற்பல விதமாகப் பேசிக் கொண்டனர். அடிப்பட்டு வந்த அவமானத்தால் முகத்தை வெளியே காட்ட நாணுகிறார் என் றார்கள் சிலர். ஏதோ ஓர் பெரிய குற்றத்தை செய்து விட்டுப் பதுங்கிக் கிடக்கிறார் என்றார் கள் வேறு சிலர். அவர் தொழிற்சாலைகள் ஒன் றில் வேலையிலிருந்து விலக்கப்பட்ட தொழிலா ளர் சிலர் அவரைக் கொன்று விடுவதாய் பய முறுத்தியிருப்பதால் அஞ்சிப்பதுங்கி யிருக் கின்றார் என்று கூறினர் மற்றும் சிலர். உலைக் குத்தான் ஒரு வாய், ஊருக்குப் பலவாய்கள் அல்லவா?

ராஜரத்ன முதலியார் விழுப்புரத்திலிருந்துத் திரும்பி வந்த மூன்றாம் நாள் இரவு. இருண்ட வான வெளியில் அங்கொன்றும், இங்கொன்று மாய் தாரகைகள் சுடர் விட்டுக் கொண்டிருப்

பதைப் போல், இருளில் மூழ்கிக் கிடந்த ராஜ ரத்ன முதலியாரின் பங்களாவில் இங்கொன்றும் அங்கொன்றுமாய் சிறு மின்சார விளக்குகள் ஒளியை உமிழ்ந்து கொண்டிருந்தன. எங்கும் அமைதி நிலவியிருந்தது. வீட்டு காவல்காரர்களி லிருந்து எஜமானர் வரையிலுள்ள எல்லோருமே மெய்மறந்த நித்திரையில் ஆழ்ந்திருந்திருந்தனர். அந்த அர்த்த இராத்திரி வேளையில் இருந்தாற் போலிருந்து தெருவாசல் புறத்தில் குழப்பமும், கூக்குரலும் உண்டாயின. அந்தக் குழப்பத் தாலும், கூக்குரலாலும் பங்களாவிலுள்ள எல்லோ ருமே விழித்துக் கொண்டனர். ராஜரத்ன முதலி யார் அரைத் தூக்கத்திலிருந்து விழித்து அலறிப் புடைத்துக் கொண்டு அங்கே வந்து சேர்ந்தார். வீட்டு வேலைக்காரர்கள் யாரோ ஒருவனைப் பிடித் துத் தூணோடு தூணாய்க் கட்டியிருந்தனர். அவனை மனங்கொண்ட மட்டும் அடித்து இம் சித்திருக்கிறார்கள் என்பதை அவனிருக்கும் கோலமே மெய்ப்பித்தது. அவனைக் கண்டதும் ராஜரத்ன முதலியார் பதைத்துப் போனார்.

"கந்தா! என்னடா இங்கே? இந்த ஆளை ஏனடா பிடித்துக் கட்டிப்போட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டார் கந்தன் என்ற வேலைக்காரனைப் பார்த்து.

"இவன் நம்ம பங்களா மதில் சுவரிலே ஏறிக் குதிச்சான். நம்ம அல்சேஷியன் நாய் அலறிக் குலைச்சதாலே நாங்களெல்லாம் எழுந்திருச்சி வந்து இவனைப் பிடிச்சிக்கிட்டோம்!" என்றான் கந்தன்.

"அடமுட்டாள்களா! இவன் திருடவந்தவன் அல்ல. என்னைப் பார்க்க வந்தவன். என் சிநேகிதரின் வீட்டு வேலையாள். ஏதோ அவசரமாய்ச் சேதி சொல்லிப் போக வந்திருக்கிறான். நீங்களெல்லாம் கும்பகர்ணர்களல்லவா? வந்தவன் கூப்பிட்டுப் பார்த்திருக்கிறான். நீங்கள் எழுந்திருந்து கதவைத் திறக்காததால் மதில் சுவரின் மேலேறி குதித்திருக்கிறான். அவன் வந்திருக்கிறதோ முக்கியமான செய்தியொன்றை என்னிடம் சொல்லிப்போக. இவ்வளவு பொறுப்பாக மதிலேறிக் குதித்தாவது சங்கதியைச் சொல்லி விட்டுப் போகலாம் என்று வந்திருக்கும் அவனுக்கு நன்றி செலுத்த வேண்டியதிருக்க, நீங்கள் அவனை அல்லல் படுத்தி விட்டீர்கள். அவமானம் வேறே செய்து விட்டீர்கள்...ம்! முட்டாள்களை வீடு நிறைய அடைத்து வைத்திருந்தால் இது மாத்திரந்தானா நடக்கும்? இன்னும், அதிகப்படியாய்க் கூட நடக்கும்," என்று மன வெறுப்பாக பேசினார் ராஜரத்ன முதலியார்.

அதற்குள், அங்கிருந்த வேலைக்காரர்கள் அந்த ஆளின் கட்டுகளை அவிழ்த்து விட்டார்கள். அவன் ராஜரத்ன முதலியாரை ஏறிட்டுப் பார்த்துத் தலை கவிழ்ந்து கொண்டான்.

ராஜரத்ன முதலியார் அவனைப் பார்த்து சொன்னார்:

"மாரி! நீ வருத்தப்படாதே! ஆள் தெரியாமல் உன்னைப் பிடித்துக் கட்டிப் போட்டு விட்டார்கள். இந்தச் செய்தியை உன் எஜமானரிடத்திலே சொல்லாதே! அவர் கேள்விப் பட்டால் வருத்தப் படுவார்!" என்று சமாதான வார்த்

தைகள் கூறி அவனை மாடிக்கு அழைத்துச் சென்றார் ராஜரத்ன முதலியார்.

வேலைக்காரர்களெல்லாம் ஏமாந்தவர்களைப் போல் நின்றார்கள். திருடனைப் பிடித்துக் கட்டிப் போட்ட அரிய சாதனைக்காக எஜமான் தங்களைப் பாராட்டுவார் என்று எண்ணியவர்களல்லவா? எண்ணியதற்கு எதிர்மாறாக அவனிடத்திலே பரிவைக் காட்டி, உறவுங் கொண்டாடித் தங்களைக் கண்டித்துப் பேசினார் என்றால் வருத்தமுறாது ஆனந்தமா அடைவார்கள்?

ராஜரத்ன முதலியாரும், மாரி என்ற அந்த ஆளும் மாடிக்குச் சென்று ஏதோ அந்தரங்கமாய்ப் பேசிக் கொண்டார்கள். அதன் பின் இருவரும் வெளியே வந்து போர்ட்டிகோவில் நிறுத்தப்பட்டிருந்த காரிலேறி எங்கோ சென்றனர்.

மறு நாள் காலை ராஜரத்ன முதலியாரின் சவம் மூலக் கொத்தளத்திலுள்ள அவர் தொழிற்சாலையின் எதிரே கிடந்தது. அவர் தேகத்தில் குண்டு பாய்ந்த அடையாளமோ, கத்தி பாய்ந்த குறியோ தென்படவில்லை. விஷம் கொடுத்துக் கொல்லப் பட்டிருக்கவேண்டும், அல்லது தொண்டையையோ அல்லது மர்மபாகத்தையோ நெறித்துக் கொன்றிருக்கவேண்டு மென்று பார்த்தோரெல்லாம் அபிப்பிராயம் தெரிவித்தனர்.

மாரி என்ற அந்தப் புதிய ஆளைப்பற்றிய தகவல் எதுவுமே யாருக்கும் எட்டவில்லை.

8

## கூண்டிலே கண்ட கிளி

சென்னை மவுன்ட்ரோடிலுள்ள இமாலயா ஓட்டலில் துப்பறியும் தினகரன் தனி மேஜையொன்றின் முன் உட்கார்ந்து சிற்றுண்டி புசித்துக் கொண்டிருந்தார். அப்போது மாலை மணி நான்குக்கு மேலாகியது. அவர் சிற்றுண்டியைப் புசித்துக் கொண்டிருந்தாலும் கண்கள் என்னவோ உள்ளே வருவோரையும், வெளியே போவோரையும் ஊடுருவிக் கொண்டுதான் இருந்தன. எப்போதுமே போலீஸார் அதிலும் குற்ற இலாகாவில் பணிபுரிவோர் நடுவீதியில் செல்லும் நல்லவர்களையும், கெட்டவர்களையும் தங்கள் கழுகுக் கண்களால் பார்வையிட்டு எடை போடுவது சகஜமல்லவா? துப்பறியும் தினகரன் மாமூல் பிரகாரம் எல்லோரையும் கவனித்து எவரையோ பிடிக்கத் திட்டமிட்டிருக்கிறாரா? அல்லது, அங்கே நிச்சயமாய் வரக் கூடியவர்களெனத் தெரிந்து வந்ததும் பிடிக்கக் காத்திருக்கிறாரா? என்பதை யார் அறிவார்? தினகரன் என்றேனும் ஓர் ஓட்டலிலோ, பூங்காவிலோ காணப் பட்டார் என்றால், அவர் யாரையோ கண்ணோட்டமிட்டுக் கொண்டுதான் வந்திருக்க வேண்டுமென்று சிலர் அபிப்பிராயம் கூறுவார்கள். அவர் வழக்கத்திற்கு மாறாய் எங்கேனும் வட்டமிட்டுக் கொண்டிருந்தால் அந்த ஸ்தலத்தில் ஏதேனும் அதிசய சம்பவம் ஒன்று நடக்கும். பயங்கரக் குற்றவாளியொருவனைப் பிடிக்கும் முயற்சி நடக்கும். போராட்டங்கூட மூள்வதுண்டு. துப்பாக்கி

வெடிப்பதும் உண்டு. கத்தி வீச்சு நடப்பதும் உண்டு.

அவர் பாதியளவு சிற்றுண்டியே புசித்திருப்பார். இரண்டு தடியர்கள் கம்பீர நடைபோட்டு ஓட்டலுக்குள்ளே நுழைந்தனர். அவர்களைக் கண்டதும் தினகரனின் புருவங்கள் நெற்றி வட்டத்தை எட்டின. விழிகளில் பிரகாசம் ஒளிர்ந்தது. வந்த இருவரில் ஒருவன் கரேலென கருத்துப் பருத்திருந்தான். மற்றவனைவிட உயரமானவனுய்க் காணப்பட்டான். அவன் ஓர் பசுத்தோல் போர்த்தப் புலி என்பதை பழகித்தான் அறிய முடியுமேயன்றி எடுத்த எடுப்பில் அவனை ஓர் சாந்தசொரூபி யென்றே எண்ணி ஏமாற வேண்டும். மற்றவன் முன்னவனைவிட சற்று மாநிற முள்ளவனுயும், குட்டையானவனுயும் காணப்பட்டான். அவன் கால்கள் நெட்டை. இவன் கால்கள் குட்டை. அவன் முகம் மழுங்கச் சிறைத்த மொட்டை. இவன் முகத்தில் வில்லன் மீசை. அரை கால் சட்டையும், அவலட்சண ஸ்லாக்-ஷர்ட்டும் அணிந்திருந்தார்கள் இருவரும். பந்தய ஓட்டத்திலும், பந்தாட்டத்திலும் பங்கு கொள்கிறவர்கள் என்பதை அவர்களின் உடையலங்காரமும், கால்களில் பூட்டப்பட்டிருந்த ஆணி அறைந்த பூட்ஸ்களும் எடுத்துக் காட்டின. இருவரும் இணைபிரியாத தோழர்கள் என்பதை ஒரே நிற உடைகளைத் தரித்தும், பூட்ஸ்களை அணிந்தும், ஓட்டியும் உராய்ந்தும் நடந்து காட்டினர்.

இருவரும் ஓட்டலுக்குள்ளே நுழைந்ததும் ஓர் மேஜையின் முன் உட்கார்ந்து சிற்றுண்டி

வகைகளுக்கு 'ஆர்டர்' செய்தனர். சிற்றுண்டி வகைகளை சப்ளையர் எடுத்து வந்து வைப்பதற்குள் அவர்கள் செய்த அட்டகாசம் கொஞ்சம் நஞ்சமல்ல. பரிகாசப் பேச்சுகள், கேலிச் சிரிப்புகள் பொறுப்பறியாத காலிகள் என்பதை அவர்களின் சேஷ்டைகள் மெய்ப்பித்தன.

லிங்கராமும், ரோமுலுவும் முதலில்லா வியாபாரத்தின் மூலம் முன்னுக்கு வந்து கொண்டிருக்கிறவர்கள். அவர்கள் நடத்தும் தொழில் வழிப்பறி. தங்கசாலையிலிருந்து வியாசர்பாடிக்குச் செல்லும் சாலையே இவர்கள் தொழில் நடத்துமிடம். இரவு ஒன்பது மணிக்குமேல் நள்ளிரவு இரண்டு மணி வரையில் அந்த வழியில் தனித்துச் செல்லுகிறவர்களிடமுள்ள பணத்தை அதட்டி—மிரட்டி—அடித்து—அட்டகாசம் பண்ணி வசூலித்துக் கொண்டுதான் வழியனுப்பி வைப்பார்கள். இந்த நல்ல தொழிலாளிகளின் வருகைக்காகத்தான் தினகரன் காத்திருந்தார் போலும்!

தினகரனைப்பற்றி கேள்விப்பட்டிராதவர்களே சென்னையிலிருப்பது அரிது. எனினும், எல்லோரும் அவரை நேரிலே பார்த்திருப்பர் என்று சொல்ல முடியாது. துப்பறியும் தொழிலில் ஈடுபட்ட காலம் முதல் அவரை ஒரே வித நடைகளோடு கண்டோர் இல்லை. நாளொரு மேனி, பொழுதொரு வண்ணம் என்பார்களே, அத்தன்மையில் விதவிதமான உடைகளில், வெவ்வேறு மனித உருவில் நடமாடி வந்தார். எனவே, நகருக்கு வெளியேயுள்ள சிற்றூரான வியாசர்பாடி ரௌடிகளான இவர்கள் துப்பறியும் நிபுணரான

இவரை நேரில் காணக்கூடிய சந்தர்ப்பம் ஏற்படவே இல்லை. இவர்கள் வழிப்பறி, அடிதடி, பொய், சூது, ஆள்மாருட்டம் இவைகளைச் செய்து வந்தாலும் இதற்கு முன் கொலைக் குற்றம் எதையும் செய்தவர்கள் அல்ல. அப்படி கொலைக் குற்றமே செய்தாலும், அது சிக்கலும், சூதும் நிறைந்திருந்தால்தானே துப்பறியும் தினகரன் அதிலே ஈடுபடுவார்? இவர்களோ பிழைக்க வகையற்ற பேடிகளாய் அலைந்து கோழைத் தனத்தைக் கொல்லைப் புறத்தில் வைத்துவிட்டு வயிறு வளர்க்க வேண்டியதை முன்னிட்டு வழிப்பறிக்காரர்களாய் மாறியவர்கள். எனவே, பயங்கரக் குற்றவாளிகள் பட்டியலில் இடம்பெற இவர்கள் யோக்கியதையற்றவர்வளாய் இருந்தது வியப்பல்லவே!

இவர்கள், உல்லாசப் பேச்சுக் கிடையேயும், உத்ஸாக சேஷ்டை களுக்கிடையேயும் சிற்றுண்டிகளைத் தீர்ப்பதில் அக்கறைக் காட்டினர். அப்போது தெருப் புறத்தில் 'பூம்! பூம்!' என்ற மோட்டார் ஹாரன் சப்தம் எழுந்தது.

"என்ன லிங்கராம்! டாக்ஸி ட்ரைவர் அவசரப் படுகிருனே! சீக்கிரம் ஆகட்டும்!" என்றுன் ரோமுலு.

"ஏன் அவசரப் படணும்? அந்த முட்டாள் ட்ரைவர் நேரம் ஆகட்டுமென்று காத்திராமல் 'ஹாரன்' கொடுக்கிருனே! பிழைக்கத் தெரியாதவன். கை நிறைய பணம் வாங்கவேண்டுமென்ற எண்ணமில்லாதவன் போலிருக்கிறது!" என்று ஏளனம் தொனிக்கக் கூறினுன் லிங்காாம்.

"உனக்கென்ன! ஊரார் பணம் தானே, போகட்டுமென்று நினைக்கிறாய். உன்னைப்போல் எல்லோருமே பொறுப்பில்லாமல் நடந்துகொள் வார்களா? ........சரி! சரி! நேரமாகிறது. ஐந்து மணிக்கெல்லாம் தன்னை வந்துக் காணுமாறு சங்கரலிங்கம் சொன்னதை மறந்து விட்டாயா? உம்! சீக்கிரம், புறப்படு!" என்று துரிதப் படுத் தினான் ரோமுலு.

ஓர் வகையாய் சிற்றுண்டி வேட்டையை முடி த்துக் கொண்டு புறப்பட்டார்கள் லிங்கராமும், ரோமுலுவும்.

வாயிலே சிகரெட் புகைய, காரிலே கம்பீரமாய் ஏறி அமர்ந்தார்கள். கோடை காலத்து மாலை வெயில், சமீபத்திலுள்ள கடலின் காற்று, மனோ கரமான கார் சவாரி.

அந்தக் கார் சிந்தாதிரிப்பேட்டையில் புகுந்து பெரியமெட்டையடைந்து சூளை—சூளைப் பட்டா ளம் இவைகளையெல்லாம் தாண்டி, மேற்கு நோக்கி விரைந்து கொண்டிருந்தது. கடைசி யாய் பாடி என்ற ஓர் குக்கிராமத்தை யடைந் தது.

சாலையையொட்டினாற்போல் தென்புறமிருந்த ஓர் மாடி வீட்டின் எதிரே கார் நிறுத்தப்பட்டது.

தோழர்கள் இருவரும் துரிதமாய் இறங்கி வீட்டை நோக்கி நடந்தனர். அதுகாறும், மோட்டார் சைக்கிளில் அமர்ந்து துப்பறியும் தினகரன் தொடர்ந்து வருவதை அவர்கள் கவனிக்கவில்லை. சற்றுத் தொலைவிலேயே மோட்டார் சைக்கிளை நிறுத்தி விட்டு அந்த மாடி

வீட்டை நோக்கி விரைந்தார் தினகரன். முன் நிலவு ஆரம்ப காலமானதால் தேய்ந்த சந்திர ஒளியில் அவர்கள் போவதை தினகரனால் காண முடிந்தது.

கார் வந்து நிற்கும் ஓசையைக் கேட்டதும் தெருக்கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார் சங்கரலிங்கம். சங்கரலிங்கத்துக்கு வயது ஐம்பத்தாறு இருக்கலாம். வயது கடந்து விட்டாலும் இளமைக்கட்டுக் குலையாத உடலமைப்பில் விளங்கினார் அவர். தலை ரோமமும், மீசையும் நரைத்து விட்டாலும் அவர் மிடுக்கு மாத்திரம் குறைந்து விடவில்லை.

"என்ன தோழர்களே! ஐந்து மணிக்குள் வரச் சொன்னேன். சரியாய் ஆறரை மணிக்கு வந்து விட்டீர்களே! இனிமேல் நாம் அங்கே போய்த் திரும்பவே நேரம் போதாதே! அதோடு அந்தப் பிடிவாதக்காரியிடம் வேறே போராட வேண்டியிருக்கும். சரி! சரி! இன்று நமக்கு ஏகாதசி இரவு தான். களைத்து வந்திருக்கிற நீங்கள் 'காஸ்' ஏற்றிக் கொள்ளுங்கள்! உடனே புறப்பட்டு விடுவோம்" என்று கூறியவாறு அவர்களை உள்ளே அழைத்துச் சென்றார் சங்கரலிங்கம்.

ஊரிலே இருந்து என் பெரியப்பா வந்திருந்தார். அவருக்கு விருந்து நடத்தி அனுப்பி விட்டுப் புறப்பட வேண்டியதாய் விட்டது. நாங்கள் வியாசர்பாடியிலிருந்து புறப்படும்போது மணி நாலரைக்கு மேலாகி விட்டது," என்று சமாதானப் புராணம்படித்தான் லிங்கராம்.

மூவரும் மேஜையின் முன் உட்கார்ந்தனர்.

சங்கரலிங்கம் மேஜையின் நடுவே வைக்கப்பட்டிருந்த பெரிய சீசாவிலிருந்து மூன்று கண்ணாடிக் கோப்பைகளில் நாட்டுச் சாராயத்தை ஊற்றினார். ஓர் சோடாவை உடைத்து மூன்று கோப்பைகளிலும் ஊற்றி சாராயத்தைப் பெருக்கினார்.

"உம்! புதுச் சரக்கு. உங்கள் வியாசர்பாடியிலே கூட இவ்வளவு ஸ்ட்ராங்காய் சரக்குக் காய்ச்சியிருக்க மாட்டார்கள். இது ஆர்டர் பேரிலே காய்ச்சி வந்த ஸ்பெஷல் சரக்கு," என்று விளக்கம் வேறே கூறினார் சங்கரலிங்கம்.

தோழர்கள் சாராய விருந்தில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்றறிந்த தினகரன் திரும்பி வந்து காத்திருந்தார்.

தோழர்கள், கள்ளச் சாராயத்தைக் குடித்ததும் அவித்து வைத்திருந்த முட்டைகளை விழுங்கினர். குடி விருந்து முடிந்ததும் தோழர்கள் மூவரும் காரிலேறினர். ட்ரைவர் குடிக்கவில்லையாதலால் நிதானமாகவே காரை ஓட்டினான். துப்பறியும் தினகரன் மோட்டார் சைக்கிளில் ஏறி அந்தக் காரைத் தொடர்ந்தார். மூன்றாம் பிறையானதால் மேற்கு வானில் மங்கிய ஒளிக் கதிரைப் பரப்பி வந்த சந்திரன் இருள்குகைக்குள் புகுந்து கொண்டான். கரேலென்ற காரிருள் எங்கும் பரவியது.

முன்னே சென்ற கார் வேகமாய்ச் சென்று கொண்டிருந்தது போலவே, பின்னால் தொடர்ந்து சென்ற மோட்டார் சைக்கிளும் வேகத்தைத் தணிக்கவில்லை. எனினும், வெளிச்சம் உண்டாக்காமலும்; ஹாரன் சப்தத்தை எழுப்பாமலும் சென்று கொண்டிருந்தது மோட்டார் சைக்கிள்.

சுமார் இரண்டு மைல் தூரம் சென்றதும் முன்னே சென்ற கார் வடக்கு புறமாய்த் திரும்பியது. அது ஓர் மணல் பாட்டை. நாட்டு வண்டிகள் சென்ற சக்கரகங்களின் சுவடு தெரிந்தது. அவ்வழியாய்ச் சென்ற கார், திருகுக் கள்ளிகளை வேலிபோல் வளர்த்து விடப்பட்டிருந்த ஓர் மைதானத்திற்குள் புகுந்தது. செடி கொடி ஏதுமில்லை. பரந்த மணல் வெளி. அதன் ஓர் மூலையில் பழைய காலத்துக் கட்டிடம் ஒன்று காணப்பட்டது. அங்கே சென்றது கார். அது அவ்வீட்டின் எதிரே நிறுத்தப்பட்டது. தோழர்கள் மூவரும் இறங்கி வீட்டை நோக்கி நடந்தனர்.

மோட்டார் சைக்கிளை திருகுக்கள்ளி வேலியின் ஓரமாய் நிறுத்தி விட்டு தினகரன் அவ் வீட்டை நோக்கி விரைந்தார்.

இவர் அவ்வீட்டை நெருங்கி கவனித்தார். தெருப்புறக் கதவு திறந்திருந்தது. வெளியே யாருமில்லை. தினகரன் பழக்கப்பட்டவரைப் போல் உள்ளே நுழைந்தார். ஓர் அறைக்குள் வெளிச்சம் தெரிந்தது. அங்கு சிலர் பேசிக் கொள்ளும் சப்தமும் கேட்டது. ஓசை யுண்டாகாதவாறு நடந்து சென்று அந்த அறையின் வெளிச் சுவற்றின் ஓரமாய் நின்றபடி கவனித்தார்.

“நீ இந்தக் காகிதத்திலே கையெழுத்து மாத்திரம் போட்டு விட்டால் போதும். உடனே உன்னை அழைத்துப்போய் உன் புருஷனிடத்திலே சேர்த்து விடுகிறேன். வீணாக நீ இந்தப் பாழடைந்த வீட்டிலே அடைப்பட்டுக் கிடப்பதை நினைத்தால் எனக்கே வருத்தமாய்த்தான்

இருக்கிறது. ஆகையால் இப்போதே இந்தக் காகிதத்தில் போட்டுக் கொடு. நாம் புறப்பட்டு விடலாம்."

இது சங்கரலிங்கத்தின் குரல் என்று தெரிந்தது.

"கையெழுத்துப் போடு என்று கேட்க வேண்டாமென்று உனக்கு மாத்திரமல்ல, அந்தத்தடியனுக்கும் எத்தனையோ தரம் சொல்லி விட்டேன். நீயும் கேட்பதாய் இல்லை. அவனும் கேட்க மாட்டேன் என்கிறான். முடிவாகச் சொல்லி விடுகிறேன். என் உயிரை இழந்தாலும் சரி, கையெழுத்துப் போட்டுக் கொடுப்பது என்பது மாத்திரம் நடக்காது."

இவ்வாறு பதிலளித்தது ஒரு பெண்ணெனத் தெரிந்தது.

"அந்த மனிதன்தான் ஏதோ காரணத்தால் உன்னிடம் சலுகைக் காட்டி வந்தார். நான் இதுவரையில் யாரிடத்திலேயும் கடுகத்தனை சலுகைக்கூட காட்டியறியாதவன். கொலை செய்கிறது என்பது எனக்குக் குதூகலத்தைத் தரக் கூடிய ஓர் விளையாட்டு. எனக்குக் கோபம் வரும்படியாய் நடந்து கொள்ளாதே! கோபம் வந்து விட்டாலோ நீ உயிர் தப்புவது அரிதாய் விடும்."

சங்காலிங்கம் கண்டித்துப் பேசினார்.

"நான் தான் சாகத் துணிந்து விட்டேனே! வாழவேண்டுமென்று ஆசைப் படுகிறவளாயிருந்தால் உன் மிரட்டலுக்கு அஞ்சி விடுவேன்தான்!

இப்போது எனக்கு வாழ்வதும் சாவதும் ஒன்றே! ஆகையால் உன் மனம்போல் நீ நடப்பதை நான் தடை செய்யவில்லை."

இவ்வாறு கண்டித்துப் பேசினள் அவள்.

"நீயே துணிந்துவிட்டபின் நான் துணியாமலிருக்க முடியுமா? நீ சாகத் துணிந்து விட்டதைப்போல், நான் உன்னைக் கொல்லத் துணிந்து விட்டேன்!.... ம்! சங்கரலிங்கம் கலிகால சங்காரமூர்த்தி யென்றறியாமல் பேசுகிருள் அகம்பாவம் பிடித்தவள். ரோமுலு! லிங்காராம்! இவளைப் பிடித்து அந்தத் தூணிலே கட்டுங்கள்!"

ஆக்ரோஷத்தோடு சங்கரலிங்கம் உத்தரவிட்டபின் அதட்டும் சப்தமும், பிடித்திழுக்கும் சப்தமும் அடுத்தடுத்துக் கேட்டன. அந்த சப்தங்கள் ரோமுலு, லிங்காராம் இருவருடையுவை என்பதை தினகரன் அறிந்தார்.

"பொல்லாதவள்! சமத்துக்காரி! மெரினு கடற்கரையிலேயே இவளுடைய துணிவையும், சாமர்த்தியத்தையும் நான் பார்த்தவன்தானே!" என்று ரோமுலு கூறினன்.

"லிங்காராம்! உன்னிடம் கொடுத்தேனே ரிவால்வர், அதை இப்படிக் கொடு" என்று சங்கரலிங்கம் கேட்கும் ஓசையைக் கேட்டதும் தினகரன் மறைவிலிருந்து முன்னேக்கி நடந்தார்.

அப்போதுதான், சங்கரலிங்கம் ரிவால்வரை லிங்காராமிடமிருந்து வாங்கி, எதிரே தூணில் இறுகக் கட்டப்பட்டிருக்கும் பெண்ணை நோக்கி உயர்த்திஞர்.

"படார்! என்ற கதவு சப்தம் கேட்டது. மூடியிருந்த கதவு சுவரில் மோதியதால் எற்பட்ட சப்தத்தோடு 'தடதட' வென்று யாரோ ஓடி வரும் சப்தமும் கேட்டது. ஆம்; சுமார் ஐம்பத்தைந்து வயதுள்ள மாது ஒருவள் அங்கே வந்து தூணில் கட்டப்பட்டு நிற்கும் மங்கையை மறைத்தபடி நின்றாள்.

இவளைக் கொல்லும்படியாய் நான் விட மாட்டேன். இவளைப் போன்ற நல்லப் பெண்ணை இந்த பூலோகத்திலே காணமுடியாது ..........ஒரு காகிதத்திலே கையெழுத்துப் போட வேண்டியது தானே! நான் அதற்குப் பொறுப்பாளி! ஒரு கையெழுத்தென்ன, ஒன்பது கையெழுத்து வேண்டுமானாலும் வாங்கித்தருகிறேன்'' என்று ஆவேசங் கொண்டவளைப் போல் பேசினாள் அவள்.

"மங்கம்மா! நீ நினைக்கிறதைப் போல் அவள் சாதாரண மனுஷியல்ல. கல்நெஞ்சுக்காரி; அரக்கி. ராஜரத்ன முதலியார் எவ்வளவோ பாடு பட்டுப் பார்த்தாரே. அவருக்கே மசியாதவள் உனக்கா மசிந்து விடப் போகிறாள்?" கண்டித்துப் பேசும் பாவனையில் கூறினார் சங்கரலிங்கம்.

"ராஜரத்ன முதலியார் எப்போதுமே இந்தப் பெண்ணின் குடும்பத்தாருக்கு விரோதியாம். விரோதிக்கு யார் தான் இடங் கொடுத்துப் பேசுவார்கள்? ......அந்தக் கதை யெல்லாம் வேண்டாம். நான் ஆச்சு இந்தக் கையெழுத்துக்கு!" என்று உறுதியாய்க் கூறினாள் அவள்.

"மங்கம்மா! உன்னுடைய தயவாலே அவள் இப்போது உயிர் தப்பினாள். நீ மாத்திரம் இந்த

சமயம் குறுக்கிடாமலிருந்தால் அவள் வாழ்நாள் முடிந்திருக்கும். சரி! நானும் என் தோழர்களும் வெளியே போயிருக்கிறோம். நீ இவள் கையெழுத்தை வாங்கி வந்து என்னிடம் கொடு" அமரிக்கையாயும், அலட்சியமாயும் சொல்லிவிட்டு வெளியே நடந்தார் சங்கரலிங்கம். லிங்காமும், ரோமுலுவும் அவரைத் தொடர்ந்தார்கள்.

அவர்கள் வெளியே வருவதைக் கண்ட தினகரன் அவசரமாய் நடந்து தெருவாசலைக் கடந்து வீட்டின் சுவர் ஓரமாய் ஒதுங்கி நின்றார்.

வெளிப்புறமாய் வந்து சேர்ந்த மூன்று தோழர்களும் இருமருங்கிலுமிருந்த திண்ணைகளில் உட்கார்ந்தனர்.

உள்ளே தூணில் கட்டப்பட்டிருந்த அந்தப் பெண்ணின் கட்டுகளை மங்கம்மா அவிழ்த்து விட்டாள்.

கட்டிலிருந்து விடுபட்ட மங்கை பெருமூச்செறிந்தாள்.

மங்கம்மா அவளை வலது கையால் அணைத்தவாறு அழைத்துச் சென்று அங்கே கிடந்த பெஞ்சின் மேல் உட்கார வைத்து தானும் உட்கார்ந்தாள்.

"அம்மா! நான் சொல்கிறபடி நட. உலகத்தில் உயிருக்கு மிஞ்சிய மேலான 'பொருள்' வேறு எதுவுமே இல்லை. நாம் உயிரோடு இருந்தால் இன்று இல்லாவிட்டாலும் என்றோ ஒரு நாள் பொருளை சம்பாதித்து விடலாம். இன்று நீ இறந்து விட்டால் அந்தப் பொருளை வேறு ஒரு

வர்தானே அனுபவிக்கும்படி நேரும்? அதனால் அறிவுள்ளவர்கள் பொருளைப் பெரிதுபண்ணுவதில்லை; நீயோ அந்தப் பொருளுக்காக அருமையான உயிரை இழந்து விடுகிறேன் என்கிறாய்! புத்திசாலிப் பெண்ணான நீயே இப்படி நடந்தால் மற்றவர்கள் எப்படி நடப்பார்கள்? நான் உன் தாய்போலிருந்து பேசுகிறேன். தாய் மகள் கெட்டுப் போக எண்ணமாட்டாள். நீ நீடூழி வாழ வேண்டும். எந்தக் குறைவுமில்லாமல் வாழ வேண்டும் என்பது தான் என் கோரிக்கை. அதனால்தான் இந்த அற்பப் பொருளின் மேல் ஆசை வைத்து அருமையான உயிரை இழந்து விடாதே என்று சொல்கிறேன்" என்று குழைவான மொழியில் கூறினான் மங்கம்மா.

"நான்தான் உயிரை வெறுத்து விட்டேனே! உயிரை விரும்பினால் அல்லவா பொருளைப்பற்றி கவலைப் படுவேன்!" என்றாள் மங்கை.

"உயிரை வெறுத்து விட்டேன் என்று சொல்வது பைத்தியக்காரத்தனம். உயிரை வெறுப்பதும், விரும்புவதும் நம் அபிப்பிராயத்தைப் பொறுத்ததில்லை. தாய் வயிற்றில் கருத்தரித்தது நம் அபிப்பிராயப்படி தானா? நம் அபிப்பிராயப் படி கருவில் உருவாகி வளர்ந்து பிறந்திருந்தால் நாம் தற்கொலை மூலமோ, அன்னியர் கை மூலமோ சாவதற்கு விரும்பலாம். எல்லோருமே வாழத்தான் பிறக்கிறார்கள். சாகப் பிறந்தோர் யாருமில்லை. ஆகையால், வாழ வேண்டுமென்ற நல்லெண்ணத்தைக் கொண்டு அந்தக் கையெத்தைப் போட்டுக் கொடுத்து விடு" என்று பரிவு பரிணமிக்கப் பேசினாள் மங்கம்மாள்.

"என்னை வீணாகத் தொந்தரவு படுத்த வேண்டாம். யார் எது சொன்னாலும் என் காதிலே படாது. என் மனத்திற்குப் பிடித்தமில்லாத எதையும் நான் செய்கிற வழக்கமில்லை" என்று கண்டிப்பு தொனிக்கும் குரலில் கூறினாள் மங்கை.

"இவ்வளவு கண்டிப்பாய்ப் பேசுவது ஆபத்தில்லவா முடியும்! உம்! நான்தான் என்ன சொல்வது. பெற்றப் பெண் போல் எண்ணி புத்திமதி சொல்லிப் பார்த்தேன். கேட்கா விட்டால் நான் என்ன செய்கிறது ?....என்னால் முடியவில்லை. உங்கள் இஷ்டம்போல் செய்து கொள்ளுங்கள் என்று சொல்லி விடப் போகிறேன்" என்று கூறி விட்டு தெருப்புறத்தை நோக்கி நடந்தாள்.

அவள் மறைந்ததும் மங்கை மன வியாகூலத்தோடு கற்சிலையைப் போல் உட்கார்ந்திருந்தாள்.

"சகோதரி! ... சந்தியா! ...நான், துப்பறியும் தினகரன் இதோ சுவரோரம் நிற்கிறேன். உனக்கு உதவி பண்ணவே வந்திருக்கிறேன். சங்கரலிங்கம் கோபமாய் வருவான். ஆத்திரமாய்ப் பேசுவான். நீ பயந்து விட்டதைப்போல் நடந்து கொள். அவன் கேட்பதைப் போல் காகிதத்தில் கையொப்பமிட்டும் கொடு. அப்படி செய்வதால் எந்தப் பாதகமும் ஏற்படாதபடி நான் பார்த்துக் கொள்கிறேன். அச்சப்படாதே. தைரியமாய் கையொப்பமிட்டுக் கொடு."

ஜன்னல் புறத்திலிருந்து உண்டான அசரீரி போன்ற பேச்சைக் கேட்டு ஆரம்பத்தில் சந்தியா மிரண்டாள். விபரங்களைக் கேட்கக் கேட்க ஓர் வகைத் துணிவு கொண்டாள். உண்மையில் துப்

பறியும் தினகரனே வந்திருப்பாரா அல்லது, சங்கரலிங்கத்தின் மாய்மால வித்தையாய் இருக்குமா என்றும் ஐயம் கொண்டாள். அப்போது ஜன்னல் புறமாய்த் தெரிந்த உருவம் இதற்கு முன் தான் பார்த்திராததாய் இருந்ததோடு, கம்பீரமிக்க தோற்றமுள்ளதாயுமிருந்தது. அந்த உருவத்தைப் பார்த்ததும் 'அசரீரி' சொன்னவற்றில் நம்பிக்கை வைத்தாள் சந்தியா. துப்பறியும் தினகரன் தன் சமீபத்தில் நிற்பதாகவே தீர்மானித்தாள்.

மங்கம்மா சென்ற சிறிது நேரத்திற்கெல்லாம் சங்கரலிங்கமும், லிங்காராமும், ரோமுலுவும் அங்கே வந்து சேர்ந்தார்கள்.

"என்ன! உன் பிடிவாதம் இன்னும் தளரவில்லையாமே! என்ன சொல்கிறாய்? காகிதத்தில் கையொப்பமிட்டுக் கொடுத்து விட்டு உயிர் தப்புகிறாயா? முடியாதென்று மறுத்து சமாதியடையப் போகிறாயா?" என்று அதிகார தொனியில் கேட்டார் சங்காலிங்கம்.

"எந்தக் காகிதத்தில் கையொப்பமிடவேண்டும்?" சாவதானமாய்க் கேட்டாள் சந்தியா.

"வெறும் வெள்ளைக் காகிதத்தில் போட்டுக் கொடுத்து விட்டால் போதும். நீ வேறே எதுவும் எழுத வேண்டியதில்லை," என்றார் சங்காலிங்கம்.

"சரி. எங்கே காகிதத்தைக் கொடுங்கள் ஒன்றில் மாத்திரம் கையொப்பமிட வேண்டுமா?... இரண்டு மூன்று காகிதங்களில் வேண்டுமானாலும் போட்டுத் தருகிறேன்" என்றாள் சந்தியா.

"வேண்டாம். எனக்குத் தேவையானது ஒரு காகிதம்தான் ........ லிங்கராம்! அந்தக் காகிதத்தையும் பேனாவையும் அந்தப் பெண்ணினிடம் கொடு," என்றார் சங்கரலிங்கம்.

லிங்கராம் ஓர் வெள்ளைக் காகிதத்தையும் பௌண்டன் பேனாவையும் அவளிடம் கொடுத்தான்.

சந்தியா, பேனாவையும் காகிதத்தையும் வாங்கி விசுப்பலகையின் மேல் வைத்தாள். அப்போது அவள் கண்கள் ஜன்னல் புறத்தை நோக்கின. காகிதத்திலே கையொப்பமிட்டாள். கைகள் நடுங்கின.

"இப்படி சுலபமாய் காரியத்தை முடிக்காமல் தகராறை வளர்த்து விட்டாயே! இப்படிக் கொடு! இனிமேல் நீ உன் வீட்டுக்குத் திரும்பிச் சென்று விடலாம்" என்று கூறியபடி கையை நீட்டினார் சங்கரலிங்கம்.

சந்தியா அந்தக் கையொப்பமிட்ட காகிதத்தை எடுத்து அவரிடம் கொடுத்தாள்.

அதை வாங்கிக் கொண்ட சங்கரலிங்கம் "மங்கம்மா! மங்கம்மா!" என்று கூவியழைத்தார்.

"ஏனுங்கோ!" வென்று மரியாதையாய்க் கூறிக் கொண்டு அங்கே வந்தாள் மங்கம்மா.

"மங்கம்மா! உன் திறமையை மெச்சினேன். முரட்டுத்தனமாய் பேசியும், நடந்தும் வந்த இவளை கொஞ்ச நேரத்திலேயே பெட்டிப் பாம்பு போல் அடங்கி நடக்கும்படிச் செய்து விட்டாயே! அந்தத் திறமையைப் பாராட்டாமலி

ருக்க முடியவில்லை. நீ செய்த உபகாரத்துக்குச் சன்மானமாய் இதை வைத்துக் கொள்" என்று கூறி சட்டை ஜேபியில் கையை விட்டு ஒரு கத்தை கரன்ஸி நோட்டுகளை எடுத்து அவளிடம் கொடுத்தார்.

இரண்டடுக்குப் பற்களும் ஏகதேசமாய் வெளியே தெரிய அசட்டுச் சிரிப்பு சிரித்தபடி நோட்டுகளை வாங்கி கண்களில் ஒற்றிக் கொண்டாள் மங்கம்மா.

சங்கரலிங்கம், சந்தியா கையொப்பம் போட்டுக் கொடுத்தக் காகிதத்தை நான்காய் மடித்து மணிபர்ஸுக்குள் வைத்துக்கொண்டார். பிறகு, லிங்கராமைப் பார்த்து "நீ போய் காரிலே இருக்கிற லெதர் பேக்கை (Leather Bag) எடுத்து வா. இந்தப் பெண் வந்த நாளாய் குளிக்காமலும், மாற்றுடை தரிக்காமலுமிருக்கிறாள். அந்த லெதர் பேக்குக் குள்ளே புதுச் சேலையும் ஜாக்கெட்டுமிருக்கின்றன. அவள் குளித்து விட்டு புது உடை தரித்துப் புறப்படட்டும்" என்றார்.

லிங்கராம் கையிலே வைத்திருந்த டார்ச் லைட்டால் வெளிச்சம் உண்டாக்கி வழி நடந்து வெளியே சென்றான். மங்கம்மா பணத்தைப் பத்திரப் படுத்த சென்று விட்டாள். ரோமுலு வந்த விடத்தில் வழிப்பறி பண்ணக் கூட வழியில்லையே என்ற கவலையோடு நின்றிருந்தான். லிங்கராம் சிறிது தூரம் சென்றிருப்பான். உய்...ய்... ய்! என்ற சப்தத்தோடு பறந்து வந்த கல் ஒன்று அவன் நடு நெற்றியைத் தாக்கியது. 'ஐயோ!' வென்ற அலறலோடு கீழே உட்கார்ந்து விட்டான் அவன். இரத்தம் 'குப்குப்' வென்று பொங்கி

வழிந்தது. ஜன நடமாட்டமே இல்லாத மைதானம் போன்றிருந்த அந்த மணல் வெளியில் அநாதையைப் போல் உட்கார்ந்திருந்தான். கல்லடிப்பட்ட விடத்தை கையினுல் அழுத்திப் பிடித்திருந்தான். போதுமான இரத்தம் வெளிப்பட்டு முடிந்ததும் ரத்தக் கசிவு ஒருவாறு ஓய்ந்தது. அதன்பின், வந்த வழியே திரும்பி நடந்தான் லிங்கராம்.

அவன் வீட்டுக்குள் சென்று அங்கிருந்தவர்களைக் கண்டதும் 'கோ!' வென்று கதறினுன்.

"எவனே என் மண்டையை உடைத்து விட்டான்!" என்று கூறிப் புலம்பினுன்.

அதைக் கேட்ட ரோமுலு சொல்லொண்ணு ஆத்திரத்தை யடைந்தான். "எந்தப் பயல் உன் மண்டையை உடைத்தான். இதோ பார், நான் போய் அவனைப் பிடுத்து அடித்துக் கசக்கிச் சாருய் பிழிந்து சீசாவில் அடைத்து வந்து சேர்க்கிறேன் பார். வில்லன் மீசை ரோமுலு என்றும், கோணக்கால் ரௌடி என்றும் பேர் எடுத்த நான் வந்திருப்பதை அறியாமல் சோதாத்தனமாய் எவனே அடித்து விட்டிருக்கிருன். இதோ போகிறேன்; அவன் எப்பேர்ப்பட்டவன் என்கிறதைப் பார்க்காமல் திரும்புகிறதில்லை" யென்று கூறி விட்டு லிங்கராம் கையிலிருந்த டார்ச் லைட்டை வாங்கிக் கொண்டு சரேலென்று வெளியே பாய்ந்து சென்றுன் ரோமுலு.

வீட்டைக் கடந்து சிறிது தூரம் சென்ற அவன் 'ஐயோ!' வென்று அலறினுன். 'படீர்' என்று அவன் தலையில் வந்து தாக்கிய கல் மண்

டையை ஆழமாய்த் துளைத்து விட்டு தரையில் விழுந்தது. அவன் ஓலத்தைக் கேட்ட லிங்கராமும், சங்கரலிங்கமும் அரிக்கன் விளக்கோடு அங்கே வந்து சேர்ந்தார்கள். "உய்ய்ய்!.... உய்ய்ய்! ........உய்ய்ய்!" என்ற சப்தத்தோடு கற்கள் மழைபோல் பொழியவே, வந்தவர்கள் தலை தப்பியது தம்பிரான் புண்ணியமென்றெண்ணி ஓட்டம் பிடித்தார்கள். சங்கரலிங்கம் கையிலே வைத்திருந்த அரிக்கன் விளக்கில் கல் தாக்கி கண்ணாடி கவசம் நொருங்கி உதிர்ந்தது. அவர்கள் பாட்டையை அடையும் வரையில் கல் மழை நிற்கவில்லை.

'தப்பினோம்—பிழைத்தோம்' என்று ஓடி வந்து சாலையை அடைந்த அவர்கள் காரிலேறி சென்னையை நோக்கி விரைந்தனர். அவர்கள் வீட்டிற்குள்ளிருந்த சந்தியாவையும், மங்கம்மாவையும் பற்றி சிந்திக்கவே இல்லை.

காரிலேறி சென்னையை அடைந்து விட வேண்டுமென்ற எண்ணத்தால் பிரயாணத்தைத் துவக்கிய அவர்களுக்கு வழியிலேயே ஓர் தொல்லை நேர்ந்தது. ஜன சஞ்சாரம் அற்றிருந்த பரந்தவெளியில் வந்து கொண்டிருந்த கார் பழுதடைந்து விட்டது. ட்ரைவர் எவ்வளவோ முயற்சிப் பண்ணிப் பார்த்தும் அவர்கள் எதிர்பார்த்த நேரத்தில் கார் ஓடக் கூடிய நிலைக்கு வரவில்லை. பாவம்! சங்கரலிங்கமும், அவரின் 'ரௌடி' தோழர்களும் தங்கள் கைக்கடிகாரத்தை அடிக்கடி பார்ப்பதும், வான வெளியை நோக்கிப் பெருமூச்செறிவதுமாயிருந்தனர் கார் ஓடக் கூடிய நிலைமையை அடைய அதிகாலை மணி

நான்கு ஆகி விட்டது. புது வேகத்தோடு புறப் பட்ட கார் சென்னையை நோக்கி விரைந்தது. சென்னை மைலாப்பூருக்குச் செலுத்து மாறு கார் ட்ரைவரிடம் சொன்னார் சங்கரலிங்கம். கார் ஐயனாவரத்துக்குள் நுழைந்தது. அப்போது சமீபத்திலிருந்த சந்திலிருந்து வேறொரு கார் இதற்கு முன்னால் சென்றது. அந்தக் கார் முன் னேயும், இந்தக் கார் பின்னேயும் வந்துக் கொண் டிருந்தன. 'பட பட' வென்ற ஓசையை எழுப் பிய வண்ணம் மோட்டார் சைக்கிள் ஒன்று பின் னால் வந்து கொண்டிருந்தது. மூன்றும் தொடர்ந்தே ஓடின. சூளைப் பட்டாளம், வேப் பேரி, முதலிய இடங்களைக் கடந்து மூன்று கார் களும் எழும்பூருக்குள் நுழைந்தன. முன்னே சென்ற கார் போலீஸ் கமிஷ்ணர் காரியாலய மிருக்கும் சாலையில் புகுந்தது. சங்கரலிங்கமும் அவர் தோழர்களும் அமர்ந்துள்ள டாக்ஸியும் அதைத் தொடர்ந்தது. மோட்டார் சைக்கிளும் நெருக்கமாக வந்து கொண்டிருந்தது.

"ட்ரைவர்! நேர் வழியில் ஓட்டாமல் இங்கே ஏன் திருப்புகிறாய்?" என்று கேட்டார் சங்கர லிங்கம்.

"உத்திரவுப்படித்தான் செய்கிறேன்" என்று அமரிக்கையாய் பதிலளித்து விட்டு காரைச் செலுத்துவதில் கவனத்தைக் காட்டினான் ட்ரை வர்.

"உத்திரவுப்படியா? யார் உத்திரவுப்படி?" குழப்பத்தோடு கேட்டார் சங்கரலிங்கம்.

"எஜமான் உத்திரவுப்படி?"

"எந்த எஜமான்?"

"எங்களுக்கெல்லாம் போலீஸ் கமிஷ்ணர்தான் எஜமான். இது கூடத் தெரியாமலா இருக்கிறீர்?"

"போலீஸ் கமிஷ்ணரா? என்ன உளறுகிறுய்?"

"உளறவாவது? துப்பறியும் உத்தியோகஸ்தனுக்கு மளிகைக் கடை மகாலிங்க முதலியாரா எஜமானர் ஆவார்? விபரம் தெரியாமல் பேசாதீர்!"

"துப்பறியும் உத்தியோகஸ்தனு? அப்படியானல் நீ டாக்ஸி ட்ரைவரில்லையா?"

"இல்லையென்று நான் சொல்லித்தானு தெரிந்து கொள்ள வேண்டும்? இப்போதாவது புரிந்து கொள்ளும்."

அப்போது முன்னே சென்ற காரும், டாக்ஸியும் கமிஷ்ணர் காரியாலயத்தின் எதிரே வந்து நின்றன. மோட்டார் சைக்கிளும் அவற்றின் சமீபமாய் வந்து நின்றது.

"ட்ரைவர்!...உம்!...ம்! காரை இங்கே நிறுத்தாதே! நேரே மைலாப்பூருக்கு ஓட்டு" திக்பிரமைப் பிடித்தவரைப் போல் வாய்க் குழறப் பேசினர் சங்கரலிங்கம்.

"ட்ரைவர் சட்டென கதவைத் திறந்து கொண்டு கீழே குதித்தார். அப்போது அவர் கையில் ரிவால்வர் பளபளத்தது. முன்னதாக வந்து நின்ற காரிலிருந்து இன்ஸ்பெக்டர் வியாசராவும், ஆறு கான்ஸ்டபிள்களும் இறங்கினர். பின்னல் வந்து நின்ற மோட்டார் சைக்கிளி

விருந்து உதவி கமிஷ்ணர் பாலகிருஷ்ணன் இறங்கினார்.

இவர்களை யெல்லாம் கண்ட சங்கரலிங்கம் ஒரு விநாடி திகைத்து விட்டார். மற்ற இருவரும் கை கால்கள் உதற எழுந்து நின்று பேந்தப் பேந்த விழித்தனர்.

"சங்கரலிங்கம்! ரோமுலு! லிங்ராம் கீழே இறங்குங்கள்!" என்று அதட்டிய குரலில் சொன்னார் துப்பறிம் தினகரன்.

அப்போது அவர், தான் தரித்திருந்த ட்ரைவர் உடையைக் கழற்றி விட்டு எப்போதும் தான் தரிக்கும் உடையோடு விளங்கினார்.

அவர் சொல்லி வாய் மூடுமுன் ரோமுலுவும், லிங்ராமும் கீழே இறங்கி விட்டனர். சங்கரலிங்கம் தயங்கியபடி கீழே இறங்கினார். இவர்களைக் கண்காணித்தபடி நின்றிருந்தார்கள் கான்ஸ்டபிள்கள்.

கண்ணிமைப் பொழுதில் கான்ஸ்டபிள்கள் ஒருவரோடு ஒருவர் தடுமாறிக் கீழே விழுந்து தரையைத் தழுவினர்.

"பிடி! பிடி!" என்று ஓலமிட்டார் உதவி கமிஷ்ணர் பாலகிருஷ்ணன். மின்னல் போல் பாய்ந்தோடும் சங்கரலிங்கத்தை விரட்டினர் போலீஸ் கான்ஸ்டபிள்களும் மற்றவர்களும். எதிரேயிருந்த மதில் சுவர் ஏறி தாண்டிக் குதித்து இருளில் மறைந்தார் சங்கரலிங்கம்.

துப்பாக்கிகளைக் கையில் ஏந்தியபடி சூழ்ந்து நிற்கும் போலீஸாரை ஒருவர்மேல் ஒருவர்

மோதிக் கொண்டு விழுமாறு தள்ளி விட்டு பாய்ந்து ஓடினார் சங்கரலிங்கம். எதிர்பாராத இந்த சம்பவத்தைக் கண்ட எல்லோருமே எதுந் தோன்றாமல் ஒரு விநாடி ஸ்தம்பித்து நின்று விட்டனர். அந்த ஒரு விநாடி அவகாசம் சங்கரலிங்கம் தப்பியோடி மறைய உதவியாய் விட்டது. வெகு சமீபத்திலே மதில் சுவர் இருந்ததால் மின்வெட்டு நேரத்தில் அவர் தாண்டிக் குதித்து மறைந்தோட முடிந்தது. அவரைப் பார்த்த தோழர்கள் இருவரும் தாங்களும் தப்பிவிட எண்ணி ஓட்டம் பிடித்தனர். ஆனால், கான்ஸ்டபிள்களின் குண்டாந்தடி அடியால் அவர்கள் ஓட்டம் தடைப்பட்டது. சீக்கிரமாகவே போலீஸார் அவர்களைப் பிடித்து விட்டார்கள். பேந்த பேந்த விழித்த அந்த அப்பரௌடிகளின் பிடரியில் அடிமேல் அடி கொடுத்து இழுத்துப் போய் சிறைக்குள் தள்ளினர் போலீஸார்.

## 9

### விடாகண்டனும், தொடாகண்டனும்

சந்தியாவும், மங்கம்மாவும் வெகு நேரம் வரை காத்திருந்தும் சங்கரலிங்கமோ மற்ற எவருமோ திரும்பி வரவில்லை. துப்பறியும் தினகரன் என்று தன்னை அறிமுகப்படுத்திப் பேசிய அசரீரி மனிதன் என்னவானான் என்ற விபரம் புரியாமல் சந்தியா திகைத்தாள். ஆனால், அங்கே ஓர் அசம்பாவிதம் நடந்து விட்ட தென்பதை அவள் அனுமானித்து அறிந்தாள். லிங்கராம் பண்டையுடைபட்டு வந்ததும், அதன்பின் சோமுனுபோய் கல் மழையில் சிக்கி அலறியதும் அவள் அறி

வாள். அங்கே நடந்த அசம்பாவிதம் எல்லைமீறி விட்டிருக்க வேண்டுமென தீர்மானித்தாள். மறு நாள் காலைவரை மங்கம்மாவும் தூங்கவில்லை. சந்தியாவும் கண்ணயரவில்லை.

மறு நாள் காலை ஒன்பது மணி ஆகியது. அந்த வீட்டின் எதிரேயிருந்த திருகுக்கள்ளி வேலியருகில் போலீஸ் வான் ஒன்று வந்து நின்றது. அடுத்த சில நிமிஷங்களில் மோட்டார் சைக்கிள் ஒன்று அங்கே வந்து நின்றது. அதிலிருந்து கீழிறங்கினர் துப்பறியும் தினகரன். போலீஸ் கான்ஸ்டபிள்கள் அறுவர் வானை விட்டுக்கீழிறங்கினர். அவர்கள் வீட்டையடைந்து மங்கம்மாவையும், சந்தியாவையும் வானில் ஏற்றிக் கொண்டு சென்னையை நோக்கி விரைந்தனர்.

மங்கம்மா போலீஸாரால் கைது செய்யப்பட்டு சிறைக்கு அனுப்பிவைக்கப்பட்டாள். போலீஸார் சந்தியாவை மைலாப்பூரிலுள்ள அவள் கணவர் வீட்டுக்கு அனுப்பி வைத்தனர். சந்தியா வீடு திரும்பி விட்டாள்; எனினும் அவள் கணவர் சபாநாதன் ஆஸ்பத்திரி சிகிச்சை முடிந்து வீடு திரும்பவில்லை. துப்பறியும் தினகரன் இந்த வழக்கில் ஈடுபட்டிருக்கிறார் என்பதை அப்போதுதான் சந்தியாவும், மற்றவர்களும் அறிய முடிந்தது. என்ன காரணத்தால், யாரால் இந்த விபரீதங்கள் நடந்தனவென்ற விபரம் எதுவுமே யாருக்கும் புரியா புதிராகவே இருந்தது. ராஜரத்ன முதலியார் இறந்து கிடந்த சங்கதியை சந்தியா தன் வீட்டிற்கு வந்த பின்னே அறிந்தாள்.

இரவு மணி ஒன்பது ஆகியது. மைலாப்பூர் வடக்கு மாட வீதியிலுள்ள பிரபல அட்வொ

கேட் சுந்தரம் அய்யர் வீட்டின் மாடியில் சங்கர லிங்கமும், சுந்தரம் அய்யரும் தனித்திருந்து ஏதோ பேசிக் கொண்டிருந்தனர். அவர்கள் இருவரும் தணிவான குரலில் பேசிக்கொண்டிருந்தார்கள். வராந்தாவில் போடப்பட்டிருந்த சாய்வுநாற்காலியில் சுந்தரம் அய்யர் சாய்ந்திருந்தார். சங்கரலிங்கம் சாதாரண நாற்காலியில் அமர்ந்திருந்தார்.

"அப்படி ஒரு கடிதத்தைத் தயார் பண்ணினாலும் அதைச் செல்லுபடி யாக்குவதில் பல கஷ்டங்கள் ஏற்படும். இப்போது நீர் சொல்லுகிறீர் அந்தப் பெண் மனச் சம்மதத்துடனேயே கையெழுத்துப் போட்டுக் கொடுத்தாளென்று. இப்போது சம்மதித்தவள் பிறகு ஏதோ ஓர் காரணத்தால் தன் அபிப்பிராயத்தை மாற்றிவிட்டால் பலனில்லாமல் போகலாம். ஒரு சமயம் விபரீதமாயும் மாறலாம். இவற்றையெல்லாம் தீர்க்கமாய் ஆலோசனைப் பண்ணி ஓர் முடிவுக்கு வாரும்," என்றார் வக்கீல் சுந்தரம் அய்யர்.

"தீர்க்கமாய் யோசித்துத்தான் அந்தப் பெண்ணின் கையொப்பத்தை வாங்கி வந்தேன். அவள் சம்மதத்தைப் பெறாமல் செய்தால்தானே நாம் அஞ்ச வேண்டும் ?........நீங்கள் அந்தக் கடிதத்தைப் பூர்த்திப் பண்ணிக் கொடுங்கள். மற்றவைகளை நான் பார்த்துக் கொள்கிறேன்" என்றார் சங்கரலிங்கம்.

"இது சொற்ப தொகை சம்பந்தப்பட்டதல்ல. ஐந்து லட்ச ரூபாயைக் கட்டுப் படுத்தக் கூடியது; ஆதலால், அதற்கான தொகையை நீர் தர வேண்டும்."

"பணம் கைக்கு வந்தபின் நான்கில் ஒரு பாகம் கேட்டாலும் கொடுக்கத் தயாராய் இருக்கிறேன். இப்போது ஏதோ என்னால் முடிந்த வரையில் தருகிறேன். அதைப் பெரும் அளவாய் எண்ணிப் பெற்றுக் கொள்ளுங்கள் !"

"எவ்வளவு தருவீர், சொல்லும் பார்ப்போம்?"

"நூறு ரூபாய் தருகிறேன் !"

"...... என்ன ? நூறு ரூபாயா ? மிகக் கேவலமான மனப்போக்குடையவராய் இருக்கிறீரே! இன்றைய செலவுக்கு ஆச்சு என்று எண்ணி நீர் ஐந்து ரூபாய் கொடுத்தாலும் போதுமென்றெண்ணி வாங்கிக் கொள்ளக் கூடிய ஓட்டை—உடைசல் வக்கீல்கள் வெகு பேர் இருக்கிறார்கள். அவர்களில் ஒருவரைத் தேடிப் பிடித்துக் கொடும்."

"கோபித்துக் கொள்ளக் கூடாது. ஐந்நூறு ரூபாய் கொடுக்கிறேன் !"

"ஐந்நூறு ! இந்த ஐந்நூறு ரூபாயை பெட்டியிலே பத்திரமாய் வைத்திரும். நீர் செய்ய விருப்பதோ போர்ஜரி வேலை. அதற்கு உதவியாய் தஸ்தாவேஜுகள் தயார் பண்ணிக் கொடுக்கும் ஓர் பிரபல அட்வொகேட்டுக்கு பீஸ் ரூபாய் ஐந்நூறு? ஐந்து லட்ச ரூபாயை அந்தரமாய்த் தட்டிப் பறிக்கப் போகும் நீர் குறைந்த பட்சம் ஐம்பதாயிரம் ரூபாயாவது கொடுக்க வேண்டாமா?"

"ஐம்பதாயிரம் தானே! தருகிறேன். தர மாட்டேன் என்று நான் தகராறு பேசவில்லையே! முன் பணமாய் இந்த ஐந்நூறு ரூபாவை வைத்துக் கொள்ளுங்கள். தஸ்தா வேஜுக்கான பணம் கைக்கு வந்ததும் மீதியைத் தந்து விடுகிறேன்."

"அப்படிக் கொடுக்கும் முன் பணம் ஐந்நூறாய் இருக்கக் கூடாது. ஐந்து ஆயிரமாகவாவது இருக்க வேண்டுமென்கிறேன்."

"இந்த சமயம் கையில் பணமில்லை. பணமிருந்தால் நான் இவ்வளவு தூரம் வளர்த்திப் பேசிக் கொண்டிருக்க மாட்டேன். இந்த தஸ்தாவேஜை தயார் பண்ணி விடுங்கள். நான் போய் எப்படியாவது ஆயிரமோ—ஐந்நூறோ தயார் பண்ணிக் கொண்டு வந்து சேர்கிறேன்."

"அதெல்லாம் முடியாது. ஐந்து ஆயிரத்துக்கு ஐந்து தம்பிடி குறைந்தாலும் அந்த தஸ்தாவேஜை தயார் பண்ணும் வேலையில் நான் ஈடுபட மாட்டேன்."

அட்வொகேட் சுந்தரம் அய்யர் இப்படிப் பிடிவாதமாய் தன் அபிப்பிராயத்தைக் கூறி விடவே சங்கரலிங்கம் அப்படியே திகைத்து உட்கார்ந்து விட்டார். அவர் மனம் பலவாறு எண்ணியது. திடீரென்று அவர் மனதில் ஏதோ புது வழிப் புலப்பட்டு விட்டது போலும்! சுந்தரம் அய்யரை ஏறிட்டுப் பார்த்தார்.

"எப்படியும் இரவு பத்து மணிக்குள் பணத்தோடு வந்து சேருகிறேன்" என்று கூறிவிட்டு

'சரக்' கென்றெழுந்து வெளியே சென்றார் சங்கரலிங்கம்.

## 10

### கொடுக்காததால் கொலை

"கல்பனா! எவ்வளவு நேரந்தான் காத்திருக்கிறது? நான் வந்திருக்கிறதோ அவசர காரியத்தை முன்னிட்டு. ஒவ்வொரு நிமிஷமும் எனக்கு ஒவ்வொரு யுகமாய்த்தான் கழிந்து கொண்டிருக்கிறது. கனகசுந்தரம் காணாமல் போய் விட்டானா? அப்படி அவனுக்கு என்னத்தான் வெளி வேலை? .......அடடே! நேரம் வீணாக வல்லவா கழிகிறது? .......அவசர காரியமாச்சே!"

இவ்வாறு புலம்பிக் கொண்டும், பதைத்துக் கொண்டுமிருந்தார் சங்கரலிங்கம்.

கல்பனா. குழம்பிய மனத்தோடு எதிரே யிருந்த சோபாவில் தலைகுனிந்தபடி உட்கார்ந்திருந்தாள். அவள் மனம் வியாகூலத்தில் ஆழ்ந்திருக்கிறதென்பதை வெளியிட்டுப் போயிருந்த அவள் முகம் விளக்கியது.

"நான் என்ன பண்ணுவேன்? கோடம்பாக்கம் வரையில் போய் விட்டு இரவு ஏழரை மணிக்குள் திரும்பி விடுவதாய் சொல்லிப் போனவன் பத்தரை மணிக்கு மேலாகியும் வராமலிருக்கிறான். இது வரையில் அவன் அப்படி இரவில் எங்குமே தங்கியதில்லை. நாளை காலை வந்து அவனைக் கண்டு பேசுங்கள் என்றாலும் நீங்கள் கேட்பதாய் இல்லை,' என்று வேதனை கலந்தக் குரலில் கூறினாள் கல்பனா.

"கல்பனு! நீ என்ன சொன்னலும் என் காதிலே விழாது. நான் அவனை பார்க்காமலும் போக முடியாது. அதிலும் இன்னும் கொஞ்ச நேரத்தில் பார்த்தே தீர வேண்டும்," அவர் பேச்சிலே ஆத்திரமும், அவசரமும் கலந்து தொனித்தன.

கல்பனு சொல்லொண்ணு வேதனையில் ஆழ்ந்தவளாய் ஏதும் பதில் பேசாமல் உட்கார்ந்திருந்தாள்.

சங்கரலிங்கம் ஆத்திரத்தை அடக்க முடியாதவராய் உறுமியபடி இங்கும் அங்குமாய் உலாவிக் கொண்டிருந்தார். அவர் நடையில் ஒரு சமயம் விறுவிறுப்புக் காணப்படும். மறு நிமிஷம் சோர்வு தோன்றும். இவருடைய இயற்கைக்கு மாருன நடவடிக்கைகளை கல்பனு கவனித்துக் கொண்டுதான் இருந்தாள். அவள் மனத்தில் இனந்தெரியாத திகிலொன்று குடிபுகுந்திருந்தது

சிறிது நேரம் அமைதியாய் உலாவுவதும், பிறகு ஆத்திரமாய் ஏதாவது பேசுவதுமாய் இருந்த அவர், சரசரவென்று மாடிப் படிக்கட்டின் வழியே இறங்கி கீழ் தளத்தை யடைந்தார்.

அப்போதுதான், தெருப் புறத்தில் வந்து நின்ற டாக்ஸி காரிலிருந்து கனக சுந்தரம் வந்திறங்கினன். அவனைக் கண்டதும் முன்னேக்கி வைத்தக் காலை பின்னேக்கி வைத்தார் சங்கரலிங்கம்.

டாக்ஸி ட்ரைவரிடம் கூலியைக் கொடுத்து விட்டு வீடு நோக்கி வந்து கொண்டிருந்தான் கனக சுந்தரம்.

"கனக சுந்தரம்! சீக்கிரம் வா. உனக்காக வெகு நேரமாய்க் காத்துக்கொண்டிருக்கிறேன்."

தன்னைப் பார்த்துக் கூப்பிடுவது யார் என்பதைக் புரிந்து கொண்ட கனக சுந்தரம் ஒரு நிமிஷம் திகைத்து நின்று விட்டான். பிறகு, மனதைத் திடப்படுத்திக் கொண்டு அவரை நோக்கி வந்தான்.

"என்ன காரியமாய் வந்திருக்கிறீர்கள்? இந்த அகாத வேளையில் நீங்கள் இவ்வளவு தூரம் வர மாட்டீர்களே?" என்று கேள்விகளை அடுக்கினான் கனக சுந்தரம்.

"அவசரக் காரியமாய் வந்தேன். எவ்வளவு அவசரமாய் வந்தேனோ, அவ்வளவிற்கும் கால தாமதமாய் விட்டது. சீக்கிரம் வா. உள்ளே போகலாம்."

சங்கரலிங்கம் அதிவேகமாய் நடந்து வீட்டிற்குள் நுழைந்தார். கனக சுந்தரம் அவரைத் தொடர்ந்தான்.

கனக சுந்தரம் அவரைத் தொடர்ந்து சென்றானேயன்றி, அவர் அப்போது அங்கே வந்துள்ளதை அவன் கொஞ்சமும் விரும்ப வில்லை. வெறுப்பு அவன் இதயத்தில் நிறைந்திருந்தது.

இருவரும் மாடி வராந்தாவை யடைந்து நாற்காலிகளில் அமர்ந்தனர். இவர்கள் வரவைக் கண்டு ஆடாமல் அசையாமல் உட்கார்ந்திருந்த கல்பனா தன் மனதில் பொங்கி யெழும் ஆத்திரத்தை அடக்க முடியாதவளாய் தன் சகோதரனைக் கடிந்து கொண்டாள்.

"கனக சுந்தரம்! நீ எங்கே தான் போய்த் தொலைந்தாய்? உன்னைக் காணுமே என்று இவர் துடியாய்த் துடித்துப் போய் விட்டார். நீ போன இடம் தெரிந்திருந்தாலும் அங்கே அனுப்பி வைத்திருப்பேன்!"

"இவர் தேடி வருவார் என்று எனக்கு சோதிடமா தெரியும்? எனக்கிருக்கும் வேலைகளை கவனிக்காமல் வீடே கதியென்று அடங்கிக் கிடக்க வேண்டுமென்ற கட்டாயம் என்ன விருக்கிறது?"

தன் வெறுப்பையும் பேச்சின் மூலம் காட்டிக் கொண்டான் கனக சுந்தரம்.

"........சரி! வீண் பேச்செல்லாம் பேசிக் கொண்டிருக்காதீர்கள். என்னை முதலில் கவனித்து அனுப்பி விட்டு உங்கள் கதைகளைப் பேசிக் கொண்டிருங்கள்."

பேச்சிலே துரிதத்தைக் காட்டினார் சங்கரலிங்கம்.

"என்னால் உங்களுக்கு என்ன ஆகவேண்டும்?" ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு பேசினான் கனக சுந்தரம்.

"ஆகவேண்டியது வேறொன்றுமில்லை. ஐந்து ஆயிர ரூபாய் உடனடியாய் வேண்டும். அவ்வளவு தான்.

"என்ன?...ஐந்து ஆயிர ரூபாயா? என்னிடம் ஏது?"

"உன்னிடம் ஏதா? இரும்புப் பெட்டியிலே

கட்டுக் கட்டாய் அடுக்கி வைத்திருக்கிறாயே அந்தக் கட்டுகளிலே இருந்து எனக்கு வேண்டியதை மாத்திரம் எடுத்துக் கொடுத்தால் போதும். அந்தப் பணத்தை ஒரு வாரத்திலே திருப்பித் தந்து விடுகிறேன். பயப்படாமல் கொடு. சாக்கு போக்கு சொல்லி ஏய்த்து விடலாம் என்றும் எண்ணாதே! உன்னிடம் பணம் வாங்காமல் இந்த விடத்தை விட்டு நகரவே மாட்டேன்."

பிடிவாதமும், முரட்டுத்தனமும் பின்னிப் படர்ந்திருந்தன அவர் பேச்சில்.

கனக சுந்தரம், சில விநாடிகள் ஏதும் பேசாமல் மௌனமாய் இருந்தான். உண்மையில் அவன் அச்சத்தால் நடுங்கிக் கொண்டிருந்தான் என்றே சொல்லலாம்.

"ஐந்து ஆயிர ரூபாய் கேட்கிறீர்களே........!" என்று மேலும் தொடர்ந்து பேச இயலாமல் திணறினான் கனக சுந்தரம்.

"ஆமாம்: ஐந்து ஆயிரம்தான் கேட்கிறேன். நீ கொடுத்துதான் தீர வேண்டும்"

கண்டிப்புத் தொனித்தது சங்கரலிங்கம் பேச்சில்.

"என் சிற்றப்பாவைக் கேட்காமல் நான் எப்படி................"

"........கொடுக்கிறது? என்று கேட்கிறாயா? ........சிற்றப்பா பெரியப்பா பிரச்னைகள் எல்லாம் இப்போது வேண்டாம். இப்போது எனக்கு வேண்டியது பணம். அந்தப் பணம் உன்னிடம் தான் இருக்கிறது."

ஆவேசங் கொண்டவர்போல் பேசினுர் சங்கர லிங்கம்.

கனக சுந்தரம் கதிகலங்கிப் போனுன்.

"நாளை காலையில் தருகிறேனே!"

"என்......ன?... நாளை காலையில் தருகிருயா? அதெல்லாம் முடியாது. இப்போதே கொடுத்தாக வேண்டும். முடியுமா? முடியாதா?

அதட்டலும், மிரட்டலும் கலந்திருந்தன அவர் பேச்சில்.

கனக சுந்தரம் ஏதுந்தோன்ருதவனுய் எழுந்து நின்ருன். அவன் அவயவங்களில் லேசான அதிர்ச்சிக் காணப்பட்டது.

சங்கரலிங்கம் எழுந்து அவன் சமீபமாய்ச் சென்று நின்ருர். அவர் தன்னை ஏதேனும் இம் சைப் படுத்தி விடுவாரோ வென்று அஞ்சி ஒதுங் கினுன் கனக சுந்தரம்.

"யோசனைப் பண்ணிப் பிரயோசனப்படாது. போய் சீக்கரம் எடுத்து வா" என்று சொல்லி கனக சுந்தரத்தின். கழுத்தைப் பிடித்துத் தள்ளி னுர் சங்கரலிங்கம்.

"ஐயோ!" வென்று அலறினுன் கனக சுந்தரம். அச்சத்தோடு நின்றிருந்தவனுனதால் அவர் கை தன்மேல் பட்டதும் தாக்குவதாகவே எண்ணி அலறி விட்டது வியப்பல்லவே! தன் சகோதரனை சங்கரலிங்கம் தாக்குவதாய் கல்பனுவும் கருதி விட்டாள்.

"ஐயையோ!" வென்று கூப்பாடு போட்டாள் கல்பனா.

இவர்களின் கூக்குரலைக் கேட்டு சங்கரலிங்கம் பயந்து விடவில்லை. ஆவேசங் கொண்டவர் போலானார். கனக சுந்தரத்தின் மேலே பாய்ந்தார், தடாலென்ற சப்தம்; அதையடுத்து மனத்தைப் பறிக்கும் மரண ஓலம். கனக சுந்தரம் ரத்த வெள்ளத்தில் மிதந்து கொண்டிருந்தான். அவன் நெஞ்சிலே கூரிய கத்தி பாய்ந்திருந்தது. 'குபுகுபு' வென்று பெருகி வந்த இரத்தத்தில் தன் சகோதரன் மிதப்பதைக் கண்ட கல்பனா கோரரூபங் கொண்ட காளிபோல் மாறினாள். சங்கரலிங்கத்தின்மேல் பாய்ந்தாள். சங்கரலிங்கத்தின் குரல்வளையைப் பிடித்து நெறித்தாள். அவளுடைய பிடியோ, தாக்குதலோ சங்கரலிங்கத்தை பாதித்துவிடவில்லை. அனாயாசமாய் அவளை இடது கையால் பிடித்துத் தள்ளினார். வெட்டி வீழ்த்தப்பட்ட மரக்கிளை தரையில் தொப்பென்று விழுவதைப்போல் எட்டப் போய் விழுந்தாள் அவள். அடுத்த விநாடியே அவர் சிட்டுப்போல் பறந்து சென்று மறைந்தார்.

கல்பனா, சுய உணர்வடைந்து கண் விழித்துப் பார்த்தபோது தன்னைச் சுற்றிலும் போலீஸார் கவிந்து கொண்டிருப்பதையும், தன் சகோதரன் கனக சுந்தரத்தின் பிரேதத்தை வெளியேற்றிக் கொண்டிருப்பதையும் கண்டாள். அவள் இதயமே வெடித்து விடுவது போன்ற அதிர்ச்சியை அடைந்தவள் மீண்டும் சுய உணர் விழந்தாள்.

## 11

### குத்து வாள் பாய்ந்தது. துப்பாக்கி வெடித்தது.

சங்கரலிங்கம் புரசவாக்கத்திலுள்ள தன் ஆசை நாயகி அஞ்சுகத்தின் வீட்டில் அடைக்கலம் புகுந்திருந்தார். அஞ்சுகம் ஆரம்பத்தில் தாசி என்ற பெயரோடு விளங்கியவள் தான். கால மாறு பாட்டை யனுசரித்து தாசி என்ற பொதுப் பெயரை மாற்றி, ஆசை நாயகி என்ற ஒருமைப் பெயரை மற்றோர் உச்சரிக்கும் நிலையை உண்டாக்கிக் கொண்டாள் அஞ்சுகம். விபசாரத்தைத் தடுக்கும் நோக்கத்தோடு தாசி என்ற தனிப் பெயரை அரசாங்கம் மாத்திரமல்ல அரசியல் தகிடுதத்தங்களும் ஆர்ப்பரித்தன. ஒருவாறு தாசி என்ற தனிப்பெயருக்கு முழுக்குப் போட்டு விட்டாலும் விபசாரத் தொழில் குறைந்து விட்டதாய் எந்த ஆதாரத்தைக் கொண்டு நிர்ணயிக்க முடியும்? நடப்பதென்னவோ நடந்து கொண்டுதான் இருக்கிறது. அஞ்சுகம், தன் ஆசை நாயகன் என்று கூறிக் கொள்ளும் சங்கரலிங்கத்திடமிருந்து மாதம் நூற்றைம்பது ரூபாய் சம்பளம்போல் பெற்று வந்தாள். அவள் தன் ஒருவனுக்கே ஆசை நாயகி என்பது சங்கரலிங்கத்தின் எண்ணம். அவளுக்கு மர்மக் காதலர்கள் பலர் இருப்பதை மற்றவர்கள் அறிந்திருந்தாலும் சங்கரலிங்கம் அறியார். மாதம் இரண்டு நாட்களோ, மூன்று நாட்களோதான் சங்கரலிங்கம் அவளோடு தங்கியிருப்பது வழக்கம். கனக சுந்தரம் கொலையுண்டபின் சங்கரலிங்கம் இரவும் பகலுமாய் எங்குமே செல்லாமல் மூன்று நாட்களாய் அவள் வீடே கதி யென்று முடங்கிக்கிடந்தார்.

அன்று வெள்ளிக் கிழமை இரவு. அஞ்சுகம் சமீபத்திலுள்ள கங்காதீஸ்வரர் ஆலயத்துக்கு சுவாமி தரிசனம் செய்துவரச் சென்றிருந்தாள். சங்கரலிங்கம் சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி சிகரெட்டைப் புகைத்து கொண்டிருந்தார். அப்போது படீரென்று கதவைத் திறந்து கொண்டு ஓர் வாலிபன் உள்ளே நுழைந்தான். அவனுக்கு ஏறக்குறைய இருபத்தாறு வயதுதான் இருக்கும். பலாட்டியனுய்க் காணப்பட்டான். அவன் முகம் வெளிறிட்டிருந்தது. கண்களிலே மிரட்சி இடம் பெற்றிருந்தது. வந்ததன் எதிரே கிடந்த நாற் காலியில் அமர்ந்தான்.

“யார் நீ?” என்று கேட்டார் சங்கரலிங்கம்.

“என்னை உமக்குத் தெரியாது. உம்மை எனக் குத் தெரியும். நான் யார் என்கிறதைத் தெரிவித் துப் போகத்தான் வந்திருக்கிறேன்.”

அவன் பேச்சில் வெறுப்பும், கண்டிப்பும் கலந்திருந்தன.

“நீ சொல்கிறது ஏதும் புரியவில்லையே” என் ருர் சங்கரலிங்கம்.

“அது எப்படி புரியும்? இதற்கு முன் என்னை நீர் பார்த்திருந்தால் அல்லவா இன்னுரென்று புரியும்? புரியும்படியாய் சொல்லுகிறேன் கேளும். ராஜரத்ன முதலியாரின் நண்பர் சுந்தர முதலியார் என்று ஒருவர் இருந்ததாய்க் கேள்விப்பட்டிருப் பீரே?”

“ஆமாம்; கேள்விப்பட்டது மாத்திரமல்ல. பார்த்துமிருக்கிறேன்.”

"அவருக்கு ஒரு பெண்ணும், ஒரு பிள்ளையு மிருந்ததாய்க் கேள்விப்பட்டிருப்பீரே?"

"ஆமாம்; அவர்களை நான் பார்த்துமிருக்கிறேன்!"

அந்தப் பெண்ணின் பெயர் இந்திரா. அவள் சகோதரன் பெயர் ரங்கராஜன். அவர்களை இப்போது பார்த்தால் கூட அடையாளம் தெரிந்து கொள்வீர் அல்லவா?"

"அவ்வளவு நிச்சயமாய்ச் சொல்ல முடியாது. பல வருஷங்களுக்கு முன் பார்த்தேன். அப்போது அவர்கள் இருவரும் சிறுவனும், சிறுமியுமாய் இருந்தார்கள்."

"ஆமாம்; இப்போது அவர்கள் சிறுவனும், சிறுமியும் அல்ல. வாலிப வயதை அடைந்தவர்கள். அவர்களில் வாலிப வயதடைந்து விட்ட அவனை உமக்குத் தெரியாதென்பதை நான் ஒப்புக் கொள்கிறேன். அவனே நான். ஆனால், அந்த மங்கையை உமக்கு வெகு நன்றாய்த் தெரியும்.

"அதென்ன அப்படிப் பேசுகிறாய்?"

"காரணமில்லாமல் பேசவில்லை. அந்தப் பெண்ணுக்கு ராஜரத்ன முதலியார் விஷங் கொடுத்து கொன்றதை நீர் அறிவீர். அவள் பிரேதத்தைத் துண்டித்து பெட்டிக்குள் அடக்கம் பண்ணியது நீர்................"

"என்ன, என்ன? துண்டித்து அடக்கம் பண்ணினதா?... கண்டபடி உளறுதே; வெளியே போ!"

"கண்டபடி உளறுவதல்ல. நடந்ததை நடந்த படிச் சொல்வது இது."

"போடா வெளியே! இனிமேல் இங்கே நின்றால் பிணமாய் விடுவாய்!

"பிணமாகப் போகிறவன் நீ. உன்னைப் பிணமாக்கி விட்டுப் போக வந்திருக்கிறவன் நான்.

அடுத்த விநாடி சங்கரலிங்கத்தின் கையிலே ரிவால்வர் பளிச்சிட்டது. வாலிபன் கையிலே பிச்சுவா மின்னியது.

"டுமீல்!" என்ற வெடியோசையும் அதையடுத்து "ஐயோ!" வென்ற அலறல் தொனியும் எழுந்தன.

'ஹா!" வென்ற அபாயக் குரலோடு திடீரென்று தரையில் சாய்ந்தார் சங்கரலிங்கம். நெஞ்சிலிருந்து குபு குபு வென்று ரத்தம் பெருகி வழிந்தது.

கழுத்தில் பாய்ந்த குண்டோடு தரையில் புரண்டுக் கொண்டிருந்தான் வாலிபன்.

இந்த விபரீத ஓசைகளைக் கேட்டு அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் அங்கே வந்து சேர்ந்தபோது இரண்டு பிணங்களைக் கண்டனர்.

## 12

### சூருவளி உருவான விதம்

போலீஸ் கமிஷ்ணர் காரியாலயத்தில் ரகசிய போலீஸ் இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகள்

கூடியிருந்தனர். துப்பறியும் நிபுணர் தினகரன் அவர்கள் முன்னிலையில் நின்று நடந்த சம்பவங்களை விளக்கிக் கூறினர்.

"குற்றங்களில் மன்னிக்கக் கூடியது, மன்னிக்கக்கூடாதது என இரண்டு வகைகள் உண்டு. சதியின் அடிப்படையில் நிறைவேற்றப்பட்ட குற்றம் எதற்குமே மன்னிப்புக் கிட்டுவதில்லை. சூழ்நிலை மாறு பாட்டால் உணர்ச்சி மீறிப் போய் நிகழ்த்தப்படும் குற்றம் கொடியதாய் இருந்தாலும் மன்னிப்பையடைய ஏது உண்டு. கடந்த ஜூன் மாதம் பதினெட்டாம் நாள் முன்னிருட்டில் திருவல்லிக் கேணி மெரினா கடற்கரைச் சாலையில் நடந்த சம்பவங்கள் சதிதிட்டத்தின் மேல் நிகழ்த்தப்பட்டவை என நிச்சயமாய்த் தெரிகிறது. முதலில் சபாநாதனின் மோட்டார் மரத்தில் மோதி நொறுங்கிக்கிடந்ததைக் காணமுடிந்தது. சற்றுத் தொலைவில் சபாநாதன் படுகாயமடைந்து பிரக்ஞை இழந்த நிலையில் கிடக்கக் கண்டோம். மூன்றாவதாய் சபாநாதனின் மனைவி சந்தியாவின் கதி என்னவாயிற்று என்றே யாருக்கும் தெரியாது போயிற்று. இந்தச் சம்பவங்களில் போலீஸார் கவனத்தைச் செலுத்தியிருந்த போது மயிலம் ரயில்வே ஸ்டேஷன் அருகே கிடந்து கிடைத்த ட்ரங்பெட்டி பிரேதம் யாருடையதென்று தெரியாதப் புதிராய் இருந்தது. போலீஸாரின் தீவிரம் அதில் திரும்பியது. அவற்றில்—அதாவது காணமல் போன சந்தியாவைப் பற்றியும், ட்ரங்பெட்டி பிரேதத்தைப் பற்றியும் துப்புத் துலக்கும் பணி என்னிடம் ஒப்படைக்கப்படவே நான் அவற்றில் கவனம்

செலுத்தினேன். ட்ரங் பெட்டியில் காணப் பட்ட பிரேதத்தின் வயதும், சந்தியாவின் வய தும் ஒன்றேயென அறிந்தேன். அதோடு ஏறக் குறைய இருவர் தேக அமைப்பும் ஒரே வகைப் பட்டதென்றும் தெரிந்தது. அடையாளம் புரிந்து கொள்ள முடியாதவாறு பிரேதத்தின் முகத்தைச் சிதைத்து விட்டிருந்தார்கள். இறந் தவள் சந்தியா வென்று தவறுதலாய் எண்ணி விட வேண்டுமென்பதே கொலை செய்தவர்களின் நோக்க மென்றறிந்தேன். ஆனால் அவர்கள் சந் தியாவின் வலது கை பெருவிரலின் மேல் பாகத் தில் கருநிற மச்சமிருந்ததை கவனியாமல் இருந்து விட்டனர் போலும். இறந்தப் பெண் ணின் பெரு விரலில் அந்த அடையாள மில்லை. பிரேதத்தைக் கொண்டும் மர்மத்தை யறியக்கூட வில்லை. எதிர் பாராவிதமாய் என் கவனம் ட்ரங் பெட்டியை ஊடுருவுவதில் ஈடுபட்டது. அந்தப் பெட்டியின் மேல் நீல நிற சாயம் பூசப் பட்டி ருந்தது. பெட்டியின் நடுவே தெரிந்த மூன்று ஆங்கில எழுத்துக்கள் சாயத்திற்கடியில் புதை யுண்டு கிடந்தன. "S. N. R." என்ற அந்த எழுத்துக்களை தன் விலாசமாய் கொண்ட வர் யார் என்பதைக் கண்டறிவதில் ஈடுபட்டேன். டெலிபோன் கைடையும், வர்த்தக டைரக்டரி யையும் சோதித்தேன். அந்த விலாசம் வர்த்தக டைரக்டரியிலு மிருந்தது. டெலிபோன் கைடிலு மிருந்தது. பிரபல இரும்பு தொழிற்சாலை யதிப ரான ராஜரத்ன முதலியாரின் விலாசமே அது வென்றறிந்தேன். ராஜரத்ன முதலியார் பெரிய தொழிற்சாலை யதிபராய் இருந்தது போலவே தண்டையார் பேட்டைப் பகுதியில் மதிப்பிற்

குரிய பெரும் புள்ளியாய் விளங்குகிறவர். ஆடம்பர வாழ்க்கை. அட்டகாசமான போக்கு. அவரை சந்தேகிப்பதென்பது லேசான காரியமா? அவருக்குச் சொந்தமான பெட்டியாய்த்தான் இருக்குமா என்ற சந்தேகம் வேறே தோன்றி விட்டது. "S. N. R" என்ற விலாசதாரர் எத்தனையோபேர் இருக்கலாம் அல்லவா? எது எப்படி இருந்தாலும் சரி; அவரைக் கண்காணித்துப் பார்த்து விடுவதென்று தீர்மானித்தேன். அவர் பங்களாவுக்குச் சமீபத்திலுள்ள ட்ரங் பெட்டி செய்யும் கம்பெனி யொன்றை யணுகி விசாரித்தேன். அந்தப் பெட்டிக்கு அவர்களே சாயம் பூசித்தந்ததாக அறிந்தேன். அந்தப் பெட்டி துருப் பிடித்து, பார்க்கவே அருவருப்புக் கொள்ளுமாறு இருந்ததால் சாயம் பூசி கண்ணுக்கழகாய்க் காணுமாறு மாற்றியமைக்கப் பட்டதாம். பெட்டியைப் பற்றிய சந்தேகத்தை ஒருவாறு நிவர்த்திப் பண்ணிக் கொண்டேன். பிரேதம் யாருடையது என்பது விளங்க வேண்டுமே! ராஜரத்ன முதலியாரின் பங்களா வேலைக்காரனை விசாரித்தேன். இந்திரா என்ற பெண் சில நாட்களாய் பங்களாவில் காணப்படவில்லையென்று தகவல் கிடைத்தது. அந்தப் பெண் ராஜரத்ன முதலியாரின் நெருங்கிய நண்பராய் விளங்கி வந்த சுந்தர முதலியார் என்பவரின் மகளாம். இந்திராவும், அவள் அண்ணன் ரங்கராஜனும் பெற்றோரை இழந்து அநாதைகளாகி விட்டனரென்றும், ரங்கராஜன் எங்கோ போய் விட்டானென்றும், ராஜரத்ன முதலியார் இந்திராவை நண்பரின் மகள் என்ற பாசத்தால் தன் பங்களாவிலேயே வித்தியாசம் பாராட்டாமல் வளர்த்து

வந்தார் என்றும் அறிந்தேன். ஒரு நாள் இரவு படுக்கைக்குப் போனவள் மீண்டும் யார் கண்ணிலும் படவில்லை யென்று அறிவிக்கப் பட்டேன்.

இந்திரா எப்படிமாயமாய் மறைந்தாள் என்பதை அறிய வேண்டுமே!.......சம்பவம் நடந்த இரவு வளவனூர் வாசியான வேலப்ப முதலியார் அங்கே வந்து தங்கியிருந்தார் எனத் தெரிந்தது. மறுநாள் அதிகாலையிலிருந்து வேலப்ப முதலியாரையும், ராஜரத்ன முதலியாரையும் எந்த வேலைக்காரனும் பார்க்க வில்லையாம். இரவோடு இரவாய் அவர்கள் எங்கோ சென்றிருக்க வேண்டும். இந்திராவையும் காணோம். இவர்கள் இருவரும் காணப்படவில்லை. வேலப்ப முதலியாருக்கும் ராஜரத்ன முதலியாருக்கும் உள்ள தொடர்பைக் பற்றி விசாரித்தேன். இருவரும் வெளிநாட்டில் கூட்டாளிகளாய் இருந்து தொழில் நடத்தி பெரும்பொருள் திரட்டி வந்தவர்களாம். இருவரும் உறவினர்களைப் போல் நெருங்கிப் பழகி வந்தவர்களாம். வேலப்ப முதலியாருக்கு நெருங்கிய உறவினர் வீடு ஒன்று சென்னையிலிருப்பதாயும் அறிந்தேன். அக்காள், தம்பி இருவரே அக்குடும்பத்தி லிருப்பவர்கள். கல்பனா, கனக சுந்தரம் என்ற அவர்கள் எனக்கு நன்றாய்த் தெரிந்தவர்கள் தான். நான் வேலப்ப முதலியாரைப் பற்றி விசாரிக்க அவர்கள் வீட்டிற்குச் சென்றிருந்தேன். அண்ணன், தங்கை இருவரும் முதல் நாள் இரவிலிருந்து காணோம் என்ற செய்தியை வேலைக்காரர்கள் அறிவித்தார்கள். யாரைத் தேடிச் சென்றாலும் 'காணோம்' என்ற பதில் தானா? அன்று சாயங்

காலம் ராஜரத்ன முதலியார் எங்கிருந்தோ தன் பங்களாவுக்கு வந்து சேர்ந்தார். ஆனால், அன்று இரவே மதுரையை நோக்கி பயணப் பட்டார். நானும் அவரைத் தொடர்ந்தேன். நானும் அவரும் ரயில் சினேகிதர்களானோம். அவரும் நானும் விழுப்புரம் ரயில்வே ஸ்டேஷனிலுள்ள சிற்றுண்டி விடுதிக்குச் சென்றோம். அப்போது அங்கே சிற்றுண்டி புசித்துக் கொண்டிருந்த கனக சுந்தரம் என்னைக் கண்டு மிரண்டு வெளி யேறினான். அப்போது அங்கே வந்து சேர்ந்த கல்பனா என் பெயரைக் குறிப்பிட்டுக் கூப்பிட்ட தோடில்லாமல் துப்பறிந்து போக வந்திருக்கிறீரா என்றும் கேட்டு விட்டாள். அந்தச் சொல்லைக் கேட்ட ராஜரத்தின முதலியார் வெகுண்டு வெளி யேறினார். என்னை ஏய்த்து விட்டுச் செல்லும் அவரைப் பின் பற்றினேன் நான். அவர் எங் கெங் கெல்லாமோ நுழைந்து போய்க் கொண்டி ருந்தார். அப்போது பாண்டிரோடு திருப்பத்தில் என்னைக் கண்ட கனக சுந்தரம், வெகுண்டான் போலும்! என் பிடியிலிருந்து தப்ப தீர்மானித்த அவன், எதிர்ப்பட்ட ராஜரத்ன முதலியாரை நான் தான் என்றெண்ணி தடியால் தாக்கிப் போட்டு விட்டு ஓடினான். தாக்குண்டு விழுந்த ராஜரத்ன முதலியாரை போலீஸார் வசம் ஒப்பு வித்து விட்டு நான் கனக சுந்தரத்தைக் கண்டு பிடிப்பதில் முனைந்தேன். ரயில்வே ஸ்டேஷன் செல்லும் சாலையிலுள்ள ஓர் மாடி வீட்டுக்கு அவன் சென்றான். அங்கே கல்பனாவும் இருந் தாள். அவர்கள் பேச்சைக் கொண்டு ஓர் அளவு தகவல் அறிந்தேன். அதன்பின், நான் சென்னைக்கு வந்து சந்தியாவின் மறை விடத்

தையும், கொலையுண்ட பெண்ணின் விபரத்தை யும் அறிவதில் தீவிரத்தைக் காட்டினேன். உண்மை விளங்கியது. சந்தியாவின் தந்தை சந்திர சேகரர் ராஜரத்ன முதலியாரிடத்தில் ஐந்து லட்ச ரூபாவை ஒப்படைத்திருந்தார். அந் தப் பணத்தை வட்டி முதலோடு தன் பெண்ணி டம் சேர்த்து விட வேண்டுமென்றும் சாசனத் தில் குறிப்பிட்டிருந்தார். மாமனாரின் சாசனத் தில் குறிப்பிட்டபடி ஐந்து லட்ச ரூபாவை வட்டி முதலோடு திருப்பித் தந்து விடுமாறு சபா நாதன் ராஜரத்ன முதலியாரை நெருங்கி வந் தான். ராஜரத்ன முதலியார் பல தடவைகள் தவணை சொல்லி வந்தாரேயன்றி, பணம் தருகிற வராய்த் தென்பட வில்லை. அதனால் ஆத்திரங் கொண்ட சபாநாதன் அவர்மேல் வழக்குத் தொடர்வதற்கான ஆயத்தங்களைச் செய்து வந் தான். சபாநாதன் தன் மேல் வழக்கு தொடர் ந்தாலும், தனக்கெதிராய் தீர்ப்புப் பெற்று விட் டாலும் தன் வாழ்வே ஆஸ்தமித்து விடுமென்று அவர் அஞ்சினார். அதனால் மனவேதனைப்பட்ட ராஜரத்ன முதலியார் அவசர செய்தி அனுப்பி வேலப்ப முதலியாரைத் தருவித்தார். அவரி டம் தன் நிலையை மனம் விட்டுக் கூறி, எதிர் நோக்கியிருக்கும் விபரீதத்திலிருந்து தப்புவதற் கான மார்க்கத்தைக் கூறுமாறு கேட்டுக் கொண் டார். வேலப்ப முதலியார் வெளி நாடுகளில் வசித்தபோது பலரிடமும் கடன்களை வாங்கி ஏப் பம் விட்டு தாய் நாடு திரும்பியபின் மாடமாளி கைக் கட்டி வாழ்கிறவர்; ஆனதால், அவரிட மிருந்து உருப்படியான தகவலைப் பெற்று கடன் காரன் நெற்றியில் பட்டை நாமத்தைத் தீட்டி

விடலாம் என்ற நம்பிக்கையோடுதான் அவரைத் தருவித்திருந்தார். அவர் சொன்ன யோசனை யின்படி நடக்கத் தயாரானார் ராஜரத்ன முதலி யார். அவர் கூறிய யோசனையின்படி நடந்ததின் விளைவுதான் திருவல்லிக்கேணி மெரினா கடற் கரை சம்பவங்கள். மயிலம் ரயில் நிலயத்தருகே கிடந்த ட்ரங் பெட்டி பிரேதம். வளவனூரைச் சேர்ந்த நரையூர் கிராமத்தில் நடந்த வேலப்ப முதலியாரின் தற்கொலை ராஜரத்ன முதலியாரின் மர்ம மரணம், கனக சுந்தரம் குத்திக் கொல்லப் பட்டது. சங்கரலிங்கத்தின் அவலச்சாவு; இவையெல்லாம் விளக்கிச் சொல்கிறேன். வேலப்பமுதலியாரே திட்டம் தீட்டினார். தினசரி கடற் காற்று வாங்கச் செல்லும் சந்தியாவையும், சபாநாதனையும் இரண்டு கார்களுக்கு இடையிலே சிக்க வைப்பதென்றும், சபாநாதனைத் தாக்கிப் போட்டு விட்டு சந்தியாவைக் கடத்திச் செல்வ தென்றும் தீர்மானித்தார். சந்தியாவினிட மிருந்து கையொப்பம் வாங்கி, அவளுக்குத்தர வேண்டிய கடனை ரத்து செய்து விட்டதாய் தஸ்தாவேஜு தயார் பண்ணி விடுவதென்றும் வழி வகுத்தார். அதற்கிடையில் அவளை யாரோ கொலை செய்து விட்டதாய் மற்றோர் நம்பும் வண் ணம் வேறொரு நங்கையைக் கொன்று ரயில் மூலம் கடத்தி எங்கேனும் வழியில் தள்ளிவிட்டு வர ஏற்பாடு செய்தார். பெற்றப் பெண்ணைப் போல் பிரியமாய் வளர்த்த இந்திராவுக்கு உண வில் விஷம் கலந்து கொடுத்து சாகடித்தார் ராஜ ரத்ன முதலியார். அவள் முகத்தைச் சிதைத்து, அங்கங்களைத் துண்டித்து பெட்டியில் அடக்கம் பண்ணியனுப்ப வழி கோலியவரும் வேலப்பமுத

லியார்தான். உடனடியாய் சந்தியாவினிட மிருந்து கையொப்பம் வாங்குவது சாத்தியமல்ல. அவள் உயிரோடு இருக்கிறுள் என்பதை யறிந் தால் போலீஸாரும், அவள் உறவினர்களும் சும்மா இருக்க மாட்டார்கள். கண்டு பிடித்து மீட்டுவர சுறுசுறுப்பைக் காட்டுவார்கள். அந்தத் தொல்லே நேராமல் அணேகோலிக் கொள்ளவே இந்திராவைப் பலியிட்டனர்.

பலனே எதிர்பார்த்தவர் ராஜரத்ன முதலியார். திட்டங்கள் வகுத்தது வேலப் முதலியார்; அவைகளே செயல்படுத்தியது சங்கரலிங்கம். இந் திராவின் கைகால்களே முறித்து, முகத்தைச் சிதைத்துப் பெட்டிக்குள் அடக்கம் செய்ததெல் லாம் சங்கரலிங்கம்தாம். இவ்வளவு சம்பவங்களி லும் உடனிருந்து உதவி புரிந்தவன் கனக சுந் தரம். இந்திராவின் சவம் அடங்கிய ட்ரங் பெட் டியை ரயிலில் ஏற்றிச் சென்று மயிலத்தருகே தள்ளி விட்டவன் கனக சுந்தரமே. அப்போது அவன் ஓர் கிராம வாசியைப்போல் வேஷந்தரித் துச் சென்றுன் என்று தெரிகிறது, சம்பவங் களெல்லாம் நடைபெற்று முடிந்த பின்னர் இவர்கள் எல்லோருமே திசைக் கொருவராய்ப் பிரிந்து செல்ல திட்ட மிட்டனர். ராஜரத்ன முத லியார் மதுரையில் தங்கியிருந்து விட்டுப் பிறகு திரும்பலாம் என்ற நோக்கத்தோடு பிரயாணப் பட்டார். கனக சுந்தரம் தன் சகோதரியோடு விழுப்புரத்திலுள்ள தங்கள் வீட்டில் தங்கியிருந் துத் திரும்பப் பிரயாணமானுன். அவனேயும், அவன் சகோதரியையும் நான் விழுப்புரம் சிற் றுண்டிசாலேயில் சந்தித்து எதிர்பாராததுதான். துப்பறியும் தினகரன் தொடர்வதாய் அறிந்த

பின் ராஜரத்ன முதலியார் விழுப்புரத்தோடு தன் பிரயாணத்தை முடித்துக் கொண்டார் என்பதை நீங்கள் எல்லோருமே அறிவீர்கள். வேலப்ப முதலியார் சென்னையில் செய்ய வேண்டிய வேலைகளை யெல்லாம் முடித்துக் கொண்டு தன் சொந்த ஊருக்குத் திரும்பி விட்டார். மற்றொரு முக்கியச் செய்தியைச் சொல்ல மறந்து விட்டேன். மெரினு கடற்கரை சாலையில் காரைமறித்துத் தூக்கிச்சென்ற சந்தியாவை சங்கலிங்கத்திடம் ஒப்படைத்திருந்தனர். பாடி என்ற கிராமத்திலிருந்து வெகு தொலைவிலுள்ள கிராம வீட்டில் சந்தியாவை அடைத்து வைத்திருந்தது சங்கரலிங்கம்தான். சாவகாசமாய் அவளிடம் கையொப்பம் வாங்கலாம் என்ற எண்ணத்தில்தான் ராஜரத்ன முதலியார் மதுரைக்குப் பிரயாணமானுர். கொலை, நரசோரம், வழிமறித்துத் தாக்கியது இம்மாதிரி கொடும் சம்பவங்கள் அடுத்தடுத்து நடந்து விடவே, அதிர்ச்சியடைந்து விட்டனர் சம்பவங்களை நடத்தியவர்கள் திக்குக்கு ஒருவராய்ப் பிரிந்து சென்றனர்.

கொலையுண்ட இந்திராவின் சகோதரன் ரங்கராஜன் தற்செயலாக தன் சகோதரியைப் பார்த்துச் செல்ல ராஜரத்ன முதலியாரின் பங்களாவுக்கு வந்திருக்கிருன். அப்போதுதான் ராஜரத்ன முதலியார், விழுப்புரத்தில் மண்டையுடைப்பட்டு சிகிச்சைப் பெற்றுக் கொண்டிருந்தார்; இந்திராவைக் காணேம். அவள் எங்கே போனுள். என்ன கதி யானுள் என்ற விபரம் கூற அங்கே யாருமில்லை. பங்களா வேலைக்காரர்களோ திடமாய் எதையும் சொல்லக் கூடாமல் மழுப்பினர். ரங்கராஜனுக்கு சந்தேகம் வலுத்தது. மர்

மத்தையறிவதில் முழு மூச்சாக ஈடுபட்டான். இருள் கரைந்து கதிரவன் ஒளி சிறுகச் சிறுகப் பரவுவதுபோல் மர்மம் சிறுகச் சிறுகக் கலைந்தது. நடந்த சம்பவங்களை நாளடைவில் அப்பட்டமாய் விளங்கிக் கொண்டான் ரங்கராஜன். தன் தங்கையைக் கொலை செய்தவர்களை ஒருவர் விடாமல் ஒழித்துக் கட்டுவதாய் சங்கல்பம் செய்து கொண்டு ரத்த வெறியனாய் வெளியேறினான். முதலில் வேலப்ப முதலியாரைப் பலி கொள்ள திட்டமிட்டு பயமுறுத்தல் கடிதம் எழுதினான். அதனால் மிரண்ட வேலப்ப முதலியார் தற்கொலை செய்து கொண்டார். இந்தக் குழப்ப நிலையில் சங்கரலிங்கத்தின் மனதில் விபரீத எண்ணமொன்று உதித்து வளர்ச்சியடைந்தது. சந்தியாவின் கையொப்பத்தை தான் வாங்கி தஸ்தாவேஜு தயாரித்து விடுவதென்றும், அந்த தஸ்தாவேஜை உபயோகித்து ராஜரத்ன முதலியாரின் பொருளிலிருந்து ஐந்து லட்ச ரூபாயைக் கைப்பற்றி விடுவதென்றும் முடிவு கொண்டார். அந்த எண்ணத்தை நிறை வேற்றிக் கொள்ள வேண்டுமானால் ராஜரத்ன முதலியாரைத் தீர்த்துக் கட்டி விட வேண்டும். சங்கரலிங்கம் தன் ஆளை அனுப்பி ராஜரத்ன முதலியாரை கூட்டி வரச் செய்தார். அந்த ஆள்தான் மதிலேறி குதித்து உள்ளே சென்று வேலைக்காரர்களால் பிடித்துக் கட்டிப் போட்டிருந்தவன். ராஜரத்ன முதலியாரோடு எதைப்பற்றியோ பேசிக் கொண்டிருந்தவர், எதிர்பாராத விதமாய் அவர் குரல் வளையைப் பிடித்து நெரித்துக் கொன்று விட்டார். அவர் இறந்த பிறகுதான் சங்கரலிங்கம் லிங்காராம், ரோமுலு என்ற வியாசர்பாடி ரௌடி

களின் துணையோடு சென்று சந்தியாவின் கை யொப்பத்தை வாங்கினார். அந்தக் கையொப்பக் காகிதத்தை தஸ்தாவேஜாய் மாற்ற வேண்டுமே! அந்த முயற்சியில் இறங்கினார். அட்வோகேட் சுந்தரம் அய்யர் ஐயாயிர ரூபாய் கேட்கவே, அதைத் தேடிப் பிடிக்கப் புறப்பட்டார். பணக் காரனான கனக சுந்தரத்தை வற்புறுத்தியபோது ஏற்பட்ட சலசலப்பால் கனக சுந்தரம் பலியா னான். கல்பனா படுகாயமடைந்தாள். சகோதரி யைக் கொலை செய்த கூட்டத்தையே ஒழித்துக் கட்டப் புறப்பட்ட ரங்கராஜன் வேலப்ப முதலி யாரையும் சங்கரலிங்கத்தையும் பலி கொண்ட தோடு தனக்கு அந்திய காலத்தையும் தேடிக் கொண்டான். இவ்விதமாக அமைதியை சூழ்நிலை யென்ற சூறாவளி குலைத்தது.

அந்நியர் பொருளை அபகரித்து விடவேண்டு மென்ற ஆத்திரத்தில் நிதானத்தை இழந்து நேர்மைத் தவறி பேயாட்டம் ஆடுவோரின் முடிவு அழிவுதான் என்பதை இந்தக் கொலை நிகழ்ச்சிகள் மெய்ப் பிக்கின்றன."

துப்பறியும் தினகரன் இவ்வாறு கூறி முடித் தார்.

போலீஸ் அதிகாரிகள் அனைவர் முகங்களிலும் மகிழ்ச்சி ரேகைப் படர்ந்தது.

முற்றும்.

---

★ இது இரவலோ, தழுவலோ, மொழி பெயர்ப்போ அல்ல. கற்பனையில் உருவானது தான் இந்தச் 'சூறாவளி.'